# கல்கி

KALKI 5.6.2005
ரூ.6.00

## கலர் மாறும் கனவுகள்!



புதுப்படம்!



பீர் பயங்கரம்!

# கல்யாணப் பந்தல்

## மணமகள் தேவை

நன்கு படித்த, தெளிவான சிந்தனை உள்ள, விவேகமுள்ள 29 வயது ஆணுக்கு **புத்திசாலித்தனம் மிகுந்த, ஆர்வமுள்ள, தன்னம்பிக்கை மிக்க, வெளிநாட்டில் படித்து சென்னையில் வசிக்கும் பெண் தேவை.**

# இன்றைய மணமகளாகத் திகழும் ஆனந்தத்தை அனுபவியுங்கள்

RmKV
முகூர்த்தப் பட்டுகள்

இன்றைய மணமகளுக்கு

### தர்பார் கிருஷ்ணா தீம் பட்டுப் புடவை

உங்கள் திருமண தினத்தன்று தர்பார் கிருஷ்ணா தீம் பட்டுப் புடவையில் பளிச்சிடுங்கள். ஸ்வரோவ்ஸ்கி கிரிஸ்டல்கள் பதித்துத் தஞ்சாவூர் ஓவிய பாணியில் தயாரித்த, நுட்பமான வேலைப்பாடுகளுடன் கூடிய புடவை இது. இந்தச் சித்திரத்தை வைத்திருப்பவருக்கு அதிர்ஷ்டம் வந்துசேரும் என்பது ஐதீகம். இந்தப் புடவையை அணிந்து உங்கள் திருமண வாழ்வை அற்புதமாகத் தொடங்குங்கள்.

பனகல் பார்க், சென்னை Ph 044 - 281 44445 | வடக்கு ரத வீதி, திருநெல்வேலி Ph 0462 - 2333105 | www.rmkv

# சாமி புள்ள!



விழுப்புரம் மாவட்டம் ஆயந்தூரில் வசித்த மலையப்பன், உபகாரமேரி தம்பதிக்கு ஐந்து பெண்கள்; மூன்று பிள்ளைகள். இவர்களின் கடைக்குட்டி பையனை, 'சாமிபுள்ள' என்றுதான் எல்லோரும் அழைத்தார்கள். அந்த வாண்டுப் பையனுக்கு இயற்கையிலேயே அமைந்திருந்த இறை பக்தி மட்டுமல்ல... கிறிஸ்தவ குடும்பங்களில், தங்கள் வீட்டுக் குழந்தைகளுள் ஒருவரை இறை பணிக்கு அனுப்புவது அந்தக் காலத்தில் வழக்கத்தில் இருந்ததும்தான் அதற்குக் காரணம். அந்த 'சாமிபுள்ள'தான் இன்று சென்னை பேராயராகப் பொறுப்பேற்றிருக்கும் அறுபத்தெட்டு வயது சின்னப்பா.

"எனக்கு சின்ன வயசிலேயே பாட்டு நன்றாகப் பாட வரும். என்னைப் பாட்டுப் பாடச் சொல்லி, கேட்டு ரசிப்பார்கள். பள்ளி நாட்களில் பெரிய கிணறுகளில் நீச்சலடித்து உண்டு, இல்லையென்று பண்ணின நாட்களை மறக்கவே முடியாது. நானே நாடகம் எழுதி, மேடையேற்றி இருக்கிறேன். 'திரும்பிப் பார்', 'அடிமைச் சிறுவன்', 'மீண்டும் கிறிஸ்துமஸ்' இவையெல்லாம் நான் எழுதி, மேடையேற்றிய நாடகங்கள். என் இன்னொரு சின்ன வயசு பொழுதுபோக்கு, களிமண்ணில் பொம்மைகளைச் செய்வது" என்று தமது நினைவுகளை சிறுவயதுக்கு ரீவைண்ட் செய்து அசை போடுகிறார் ஆர்ச் பிஷப்.

"என் மீது என் குடும்பத்தினரும், என் கிராமத்து மக்களும் காட்டின அன்பு அளவில்லாதது. அந்த அன்பில் பரிபூரணமாய் திளைத்து, அனுபவித்த காரணத்தால், இன்றும் யாரிடமும் ஜாதி, மத, இன, மொழி வேறுபாடு சிறிதளவும் இல்லாமல் நான் பெற்ற அன்பை, தங்கு தடை இல்லாமல் மற்றவர்களுக்கு வழங்க என்னால் முடிகிறது" என்று நெஞ்சம் நெகிழக் கூறும் பேராயர் சின்னப்பாவுக்கு மிகவும் பிடித்த விஷயம் சாமான்ய மக்களுடன் உரையாடுவது; அவர்கள் பிரச்னைகளை செவி கொடுத்துக் கேட்டு, ஆறுதல் சொல்லி பிரச்னைகள் தீர ஆலோசனைகள் வழங்குவது.

பத்தாண்டு காலம் இறையியல் சம்பந்தப்பட்ட படிப்புகளை முடித்துள்ள இவர், திண்டிவனத்தில் ஆசிரியர் பயிற்சி படித்தவர். பள்ளியில் ஆசிரியராகவும், தலைமை ஆசிரியராகவும் இருந்த காலகட்டத்தில், பள்ளிக்கூடங்களில் அன்பும் சகோதரத்துவமும் இருக்க வேண்டியது மிக முக்கியம்" என்று வலியுறுத்தியவர்.

"'சமரசம் உலாவும் இடமே!' என்ற சீர்காழியின் பாடல் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அந்த சமரசம் மரணத்துக்குப் பின் மட்டுமின்றி, இந்த உலகில் வாழ்கிறபோதே நிலவ வேண்டும் என்பதுதான் என் சின்ன ஆசை" என்கிறார் ஆர்ச் பிஷப் சின்னப்பா.

**- எஸ். சந்திரமௌலி**

**சே**து சமுத்திர திட்டம் முதல் சத்துணவு வரை; கோயில்களில் அன்னதான ஏற்பாடு முதல் கட்டணக் கழிப்பிட வசதி வரை அனைத்தையும் "நான் செய்தேன் நான் செய்தேன்..." என்று சொல்லிக்கொள்வது இன்றைய அரசியல் கலாசாரம். இப்படி நிர்வாகப் பணிகளைத் தனிநபர் சாதனைகள் போல் கொண்டாடி மார்தட்டுவோர், நாட்டுக்காக என்ன தியாகம் செய்தார்கள்? அட தியாகமே வேண்டாம் அய்யா... என்ன பணிதான் செய்தார்கள் என்று ஆராய்ந்தால், உப்புப் பெறாத விஷயம்கூட அகப்படாது!

1930ல் உப்பு சத்தியாகிரஹத்தில் ஈடுபட்ட ராஜாஜி, அது குறித்து 1955ல் (வெள்ளி விழா) நினைவு கூர்ந்து வானொலி உரை ஆற்றினார். அப்போது அவர் பேசிய சில வாக்கியங்கள் மொழியின் எளிமைக்கு மட்டுமின்றி, அந்தத் தலைவருடைய மனத்தின் எளிமைக்கும் சான்று:

தஞ்சாவூர் நகரத்துக்குப் போனோம். சாயந்தரம் நான், எப்படி இருக்கிறது பார்க்கலாம் என்று தனியாகப் போனேன். ஊர்ல ஒருவித ஏற்பாடும் கிடையாது. நமக்கா, நோட்டீஸ் கீட்டீஸ் போட்டு யாரும் கூட்டங் கூடறதாவது, தலைவராவது, ஒண்ணும் கிடையாது. எந்த இடத்தில் கூட்டம் என்று நாம் நோட்டீஸ் அனுப்பியிருந்தோமோ, அங்கு போய்ப் பார்த்தால் ஒரு நாற்காலி, மேஜை ஏதும் கிடையாது. இந்த மீட்டிங் சரியாக நடக்காது என்று தீர்மானித்துக்கொண்டு, ஆனாலும் பார்க்கலாம் என்று ரொம்பக் கஷ்டப்பட்டு அங்கு ஒரு வக்கீல் நண்பரிடம் ஒரு உடைந்த மேஜை சம்பாதித்தோம். சம்பாதித்தோம் என்றால் நானும் கோபு என்கிற ஒருவர் - அவர் இப்போது டாக்டராப் போயிருக்கார். அப்போ வெறும் தொண்டராகத்தான் இருந்தார். அவரும் நானும் சேர்ந்து அந்த மேஜையைக் கொண்டு வந்தோம். ரொம்ப உடைந்து போயிருந்த மேஜை. அதைத்தான் கொடுத்தார் அவர். ஏனென்றால் அப்புறம் ஏதாவது விசாரணை வந்தால் என் மேஜை அல்ல என்று சொல்லிவிடலாம் அல்லவா, அதற்காக. அதைக் கொண்ர்ந்து அந்த வெட்ட வெளியில் ஒரு இடத்துல போட்டேன். அதுதான் மீட்டிங்குக்கு ஏற்பாடு. நிசப்தம். ஒரு ஆள்கூட அங்கே கிடையாது. திரும்பிப் போனேன், நம்முடைய முகாமுக்கு.

எல்லோரும் - 101 பேரும் - போனோம். வழக்கமா நான் போற இடத்துல எல்லாம் சாயந்திரம் வரை நடக்க வேண்டியது, சாயந்திரம் பிரார்த்தனைக் கூட்டம். இதுதான் நம்முடைய புரோகிராம். அன்றைய பிரார்த்தனைக் கூட்டம் தஞ்சாவூர்ல அந்த வெட்ட வெளியில, போய்ச் சேர்ந்தோம். போனதும் பார்த்தால் அந்த மைதானம் பூராவும் இருபதாயிரம் ஜனங்கள் கூடிவிட்டிருந்தார்கள். ஒருவித ஏற்பாடும் இல்லாமல் கடல் போல் அந்த ஜனங்கள் கூடியிருந்ததைப் பார்த்து, இது ஆண்டவனுடைய ஏற்பாடு என்று நிச்சயம் செய்து கொண்டேன். சரி, ஆரம்பித்தோம். என்னுடைய பக்தியானது ரொம்ப பரவ சமாப்போச்சு. அந்த முத்தி நெறியைப் பாடினார் சுப்பையா என்பவரும், தொண்டர்களும் சேர்ந்து

# புளியங்கொட்டை தத்துவம்!



"முத்தி நெறி"யில்

"நமையும் ஓர் பொருளாக்கி, நாய் சிவிகை ஏற்றுவித்து,
அம்ம, எனக்கு அருளியவாறு ஆர் பெறுவார் அச்சோவோ"

என்று ஒரு வரி, அதைச் சொன்ன உடனே அது என்னைப் பற்றியே எழுதினதாக எனக்கு உணர்ச்சி ஏற்பட்டு, கண்ல தண்ணீர் வந்து பேச முடியாமப் போச்சு. எனக்கு இவ்வளவு பெருமை ஏற்பட்டுப் போச்சு என்று நானே வியந்து கொண்டு அந்தக் கூட்டத்தை எப்படியோ முடித்தோம்.

உலகத்தில் - பிரபஞ்சத்தில் ஒரு நிகழ்ச்சி நடந்தால் அதன் பின் என்ன நடக்க வேண்டும். அதற்குப் பின் என்ன நடக்க வேண்டும் என்றெல்லாம் ஒரு நியதிப்படி நடக்கிறது. ஒரு புளியங்கொட்டையை நட்டால் எப்படி முளைத்துச் செடியாக வளர்ந்து மரமாகிறதோ, அப்படிப் பல நிகழ்ச்சிகள் பெரிய மரமாகிறது. இப்படி நடக்க வேண்டும் என்று ஆண்டவனுடைய ஏற்பாடு. இயற்கை நியதி.

*ராஜாஜியின் வானொலி உரையை முழுமையாக அச்சிட்டு (நன்றி: தினமணி சுதந்திர பொன்விழா மலர்),* விநியோகித்தது சென்னை, உந்துனர் அறக்கட்டளை. மூதறிஞர் எழுதிய ஆங்கில கட்டுரைகளடங்கிய 'சத்யமேவ ஜெயதே' என்ற நூலை மறுபதிப்பு செய்து வெளியிடும் விழா அழைப்பிதழுடன் வந்தது இந்த வானொலி உரை.

'சத்யமேவ ஜெயதே' விலை: ரூ.500

**வெளியீடு:**

**தி கேட்டலிஸ்ட் ட்ரஸ்ட்,
எண்.3/2, சாந்தி அவென்யு,
டாக்டர் ராதா கிருஷ்ணன் நகர்,
திருவான்மியூர்,
சென்னை - 41**




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி. ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623
2225 1324
தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு



# பீர்

மறுபடியும் மாணவிகளுக்கே வெற்றி.

ப்ளஸ் டூ மற்றும் ஜூனியர் காலேஜ் தேர்வுகளில் இந்திய அளவில் இந்த முறையும் மாணவர்களுக்கு இரண்டாவது இடம் தான். என்ன ஆயிற்று மாணவ மணிகளுக்கு? 'எல்லாம் இந்தப் பாழாய்ப் போன பீர் பழக்கம் தரும் பகீர் பரிசுதான்' என்ற அதிர்ச்சியான சர்வேயை முன் வைக்கிறது, 'நேஷனல் கமிட்டி ஃபார் சோஷியோ - எகனமிக் ரிசர்ச்' என்னும் தன்னார்வ அமைப்பு. மும்பையைத் தலைமையிடமாகக் கொண்டு செயல்பட்டு வரும் இந்த அமைப்பு தரும் புள்ளி விவரங்களைக் கேட்டு இந்திய பீர் சந்தையைக் கையில் வைத்திருக்கும் மதுபான முதலாளிகளுக்கு வேண்டுமானால் புல்லரிக்கலாம். ஆனால், இந்திய குடிமக்கள் கண்டிப்பாகக் கலவரப்படுவதைத் தவிர வேறு வழியில்லை.

பதினாறு முதல் முப்பத்துநான்கு வயதுக்குட்பட்ட இந்திய இளைஞர்களில் சரி பாதி பேர் (50%) பீர் அருந்தப் பழகியிருக்கிறார்கள். இவர்களில் 28.16 சதவிகிதம் பேர் வாரத்தில் இரண்டு முறை பீரை ருசிப்பவர்கள். 12.73 சதவிகிதம் பேர் வாரத்தில் மூன்று முறையும், எஞ்சிய 9.11 சதவிகிதம் பேர் சந்தர்ப்பம் வாய்க்கும்போதெல்லாம் தயங்காமல் பீர் மற்றும் ஆல்கஹால் மது வகைகளை அருந்தக் கூடியவர்கள் என்கிறது இந்த அமைப்பு. கையோடு, அரசுத் தேர்வுகளில் பிரகாசிக்க முடியாமல் போவதற்கு மாணவர்களின் பீர் பழக்கமும், அதனால் அவர்களது நினைவாற்றல் மற்றும் மூளையின் செயல் திறனில் ஏற்படும் திடீர் மந்த நிலை (poor cognitive function)யும் ஒரு முக்கிய காரணம் என்கிறது. இது எந்த அளவுக்கு நிஜம்...? வலைத்தளத்திற்குள் புகுந்தால் அதிர வைக்கின்றன தகவல்கள்.

பள்ளியிறுதி வகுப்பு மற்றும் கல்லூரிக்குள் நுழைந்த பிறகு, நட்புக் குழுக்களாக இயங்குவதை மாணவர்கள் பெரிதும் விரும்புகிறார்கள். நட்பு வட்டம் அவர்களது விருப்பு வெறுப்புகளை உருவாக்கும் களமாகி விடுகிறது.



• டாக்டர் ரவிச்சந்திரன்

# பயங்கரம்! இளைஞர்களே உஷார்!

நடை உடை ஃபேஷனில் ஆரம்பித்து, அனைத்திலும் ஒருமித்துச் செயல்படுவது நட்புக் குழுவின் கட்டுப்பாடாக மாறுகிறது. தனித்துச் செயல்பட்டால் எங்கே நம்மை குழுவிலிருந்து ஓரங்கட்டி விடுவார்களோ என்ற பயம் குழுவில் அனைவருக்கும் பொதுவாகி விடுவதுதான் விபரீதங்களின் தொடக்கம்.

கட்டாய கேர்ள் ஃப்ரெண்ட், கட்டாய செல்போன், கட்டாய சாட்டிங் போலவே கட்டாய பீர் பழக்கத்துக்கும் மாணவர்கள் ஆளாகி விடுகிறார்கள். இன்னொரு பக்கம், 'தங்கள் பிள்ளைகள், பீர் சாப்பிடுவதை பெரும்பாலான பெற்றோர்கள் கண்டும் காணாமல் விட்டு விடுகிறார்கள்' என்று அலறுகிறது ஃபோரம் ஆஃப் ஆண்டி ஆல்கஹால்.

எத்தனை தன்னார்வ அமைப்புகள் முன் வந்து அலறினாலும் பீர் ஒரு நான்-ஆல்கஹாலிக் பானம் என்ற தொனியில் தங்கள் பிராண்டுகளை, குளிர் பானம் அல்லது அடைக்கப்பட்ட குடிநீர் என்பது போல் கூசாமல் விளம்பரங்களின் வழியே மறைமுக பிரசாரம் செய்து விற்பனையைப் பெருக்கிக் கொள்ளும் இந்திய பீர் உற்பத்தியாளர்களின் காட்டில் மழை கொட்டுகிறது. கடந்த 2001-2002 ஆம் ஆண்டில் இந்திய பீர் சந்தையில் 6.7 மில்லியன் ஹெக்டோலிட்டர்களாக இருந்த பீர் விற்பனை, கடந்த இரண்டு ஆண்டுகளில் 12 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது. இந்தியாவில் மிகப் பெரிய பீர் உற்பத்தி நிறுவனங்கள் மூன்று மட்டும்தான். ஆனால், அருகில் உள்ள சீனாவில் நானூறு பெரிய பீர் உற்பத்தி நிறுவனங்கள், உள் நாட்டுச் சந்தையில் கோக் - பெப்ஸியைப் போல பெரிய யுத்தத்தில் ஈடுபட்டுள்ளன. தவிர சீனாவில் போட்டி கடுமை என்பதால், அறுநூற்று ஐம்பது மில்லி பீரின் விலை இந்திய மதிப்பில் வெறும் பதினெட்டு ரூபாய்தான்!

விலையும் குறைந்து, லாபமும் குறைந்து போட்டி போட வேண்டி இருப்பதால், உலக வர்த்தக ஒப்பந்தத்தைப் பயன்படுத்தி, இந்தியாவுக்குள் நுழையும் எல்லா வேலைகளிலும் தீவிரமாக இறங்கவிட்டன சீன, ஐரோப்பிய பீர் நிறுவனங்கள். இவர்களும் இந்தியச் சந்தைக்கு நுழைந்துவிட்டால், இப்போது நாற்பத்தைந்து முதல் அறுபது ரூபாய்க்குக் கிடைக்கும் அறுநூற்று ஐம்பது மிலி பீர், பதினைந்து ரூபாய்க்கே கிடைக்க ஆரம்பிக்கும். விலை குறைந்தால் மாணவர்கள், இளைஞர்களின் புத்தகப் பை வரை பீர் புட்டிகள் வந்துவிடலாம். "நாளை வரப்போகும் ஆபத்தை எண்ணி அலறித் துடிக்க வேண்டிய அதே நேரம், இன்றைய பீர் பழக்கம் மாணவர்களை எப்படி பாதிக்கிறது என்பதைப் பற்றி விழிப்

புணர்வு தர வேண்டிய அவசியம் அரசுக்கும் மீடியாவுக்கும் உள்ளது'' என்கிறார் சிறுநீரகவியல் நிபுணர் டாக்டர் பி. ரவிச்சந்திரன். அவர் மேலும் சொல்கிறார்:

"வளர்ந்த நாடுகளைவிட வளரும் நாடுகளில் இருபது முதல் முப்பத்தைந்து வயதுக்குட்பட்ட இளைஞர்களை குறி வைத்தே பீர் விற்பனை செய்யப்படுகிறது. பீர் ஒரு மதுபானம் அல்ல! அது பார்லி வாட்டர், உடலுக்கு ஆரோக்கியம் தரக்கூடியது என்ற பொய்ப் பிரசாரம் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இளைஞர்கள் மத்தியிலும் பீர் சாப்பிட்டால் குண்டு கன்னங்கள் கிடைக்கும். உடம்பில் சதை போடும். முகம் பளபளப்புடன் அழகாக ஜொலிக்கும் என்பது போன்ற மூடநம்பிக்கைகள் நிலவுகின்றன. உண்மையில், பீர் சாப்பிடும்



இளைஞர்களுக்கு அடி வயிறு மட்டும் பானை போல் உப்பிவிடும், 'பீர் சின்ட்ரோம்' ஏற்படும். பார்லி வாட்டரை இயற்கையாகச் சாப்பிடுவது, உடல் நலத்திற்கு எவ்விதத்திலும் தீங்கானது அல்ல. ஆனால் அதையே நீண்ட நாட்கள் பர்மெண்டேஷன் முறையில் புளிக்க வைத்து, அதில் ஆல்கஹால் மற்றும் அமிலங்கள் உருவாகி, பீர் எனும் மதுபானமாக மாறிய பிறகு அருந்துவது உடல் நலத்துக்கு உலை வைக்கும் விஷயமாகும். எண்பது கிலோ உடல் எடை கொண்ட ஒருவர், நூற்று ஐம்பது மிலி பீர் சாப்பிடுவதில் ஆபத்துகள் குறைவு என்கின்றன ஆய்வுகள். சராசரியாக ஐம்பது கிலோ எடை கொண்ட ஆசியர்கள் எழுபத்தைந்து மிலி அளவு பீர் அருந்தலாம். ஆனால் இந்திய இளைஞர்களின் பீர் அருந்தும் மனோபாவம் இந்த அளவுகளோடு ஒத்துப் போவதில்லை. குறைந்தபட்சம் ஐந்நூறு மில்லி முதல் ஆயிரத்து முந்நூறு மிலி வரை பீர் அருந்துவதால், இன்று இளைஞர்களிடையே 'பீர் பெல்லி' (முன் தொப்பை) சர்வ சாதாரணமாகி விட்டது.

'பீர் பெல்லி' ஏற்படுவதற்குக் காரணம் எல்.டி.எல் (LDL) எனப்படும் கெட்ட கொழுப்பு வயிற்றுக்குக் கீழே கூடு கட்ட ஆரம்பிப்பதுதான். மாங்காய்கள் நன்கு முற்றிய நிலையை எட்டும் முன்பே பறிக்கப்பட்டு (அரைக்காயாக), கால்ஷியம் - கார்பைட் புகையை அவற்றின் மீது அடித்து, வலிய பழுக்க வைப்பது இங்கே

**'முதுமைத் தோற்றம், சர்க்கரை நோய், ஆண்மைக் குறைவு ஏற்படும்!'**

வியாபார உத்தி. இளமை என்பதும் காய் போன்றதுதான். இதை மதுபானம் எனும் நச்சுப்புகை கொண்டு ஊதி பழுக்க வைத்தால் முதுமை தாக்கும். புளித்த நிலையில் அதிகளவு கார்போஹைட்ரேட், அமிலங்கள், ஆல்கஹால் இருப்பதால் சிறுநீரகத்துக்கு இரு மடங்கு வேலைப் பளுவை தரும் கொடிய மதுபானம் பீர். பீர் அருந்தும்போது இரத்தத்தில் உள்ள அவசிய தாதுக்களான மெக்னீஷியம், பொட்டாஷியம், கால்ஷியம் ஆகியவை சிறுநீருடன் வெளியே வரத் தொடங்கி விடுகின்றன. தொடர்ந்து பீர் அருந்துவது ஒரு பழக்கமாகி விட்டால் சராசரி

அடிக்கடி வரும்
சளித்தொல்லையால்





உங்கள் குழந்தை
செவிடாகலாம்.

குழந்தைகளை அடிக்கடி டாக்டரிடம் கொண்டுபோய் சலித்துவிட்டீர்களா?

விடுதலை! சளியினால் காதுகேளாமை / குறட்டை /வாய்வழி மூச்சுவிடுதல் / ஆஸ்துமா / காதுவலி/டான்சில் படியின்மை / படிப்பில் கவனம் செலுத்தமுடியாமலிருத்தல் மற்றும் பல பிரச்சனைகளுக்கு ஒரே நாளில் நிரந்தரத் தீர்வு. பெரியவர்களுக்கு 10 நிமிட லேசர் சிகிச்சையில் குறட்டையை குணப்படுத்தலாம்.

தீர்வுகாணுங்கள் முற்றிலும் நவீனமான ஒரு நாள் சிகிச்சையில்

வாழ்நாள் முழுவதற்குமான உடல் நலத்திற்கு ஒரே நாளில் நிரந்தர தீர்வு

சளி, மூச்சுதிணறல் டான்சில் நோய்களுக்கு நவீன காப்ளேட்டர் சிகிச்சை
அடினாய்டு பிரச்சனைக்கு இரத்த சேதமற்ற 10 நிமிட எண்டாஸ் கோபிக் லேசர் சிகிச்சை

Consult now !



விக்ரம் ENT மருத்துவமனை & ஆராய்ச்சி மையம்

69, மேற்கு வெங்கடசாமி ரோடு, ஆர். எஸ். புரம், கோயமுத்தூர் – 641 002. தமிழ்நாடு. இந்தியா. போன் : +91-422- 2550633, 2546387, 2550133 மொபைல் : +91-98431-50063 ஃபேக்ஸ் : +91-422 - 2545384 E-mail : vikram_hospital@yahoo.com

• Prof. P.G. Visvanathan M.S.,F.R.A.C.S.,F.I.C.S.,D.L.O. • Dr. Aruna Visvanathan M.B.,M.S.(E.N.T),F.A.G.E. • Dr. Anjana Visvanathan M.B.,M.S.(E.N.T),F.A.G.E. • Dr. Nimesh Patel M.B.,M.S.,D.L.O. • Dr. Priya U.K. M.B., D.L.O. • Dr. Saurav Basu M.S.,D.L.O. • Dr. Rinkoo Das M.B., D.L.O.
Visiting Faculty: • Dr. Karl Horn M.D.(U.S.A) • Dr. W.J. Cornay M.D.(U.S.A) • Dr.Calogero Sertino M.B., M.S.(Italy)

Patients must schedule appointments in advance


சோடியம் அளவு இரத்தத்தில் குறைந்து, மூளை அடிக்கடி சோர்வாகி விடும். நமது அன்றாடப் பணிகளையும் ஒத்திப்போடச் சொல்லும் மனநிலைக்கு சோடியம் இழப்பு தள்ளிவிடும். மாணவர்கள் அன்றைய பாடங்களை அன்றே படிக்கும் மனநிலை இல்லாது போகும். பீர் அருந்தும் மாணவர்கள் அதிகாலையில் எழுந்தாலும் மீண்டும் தூங்கிப் போகும் நிலைக்குத் தள்ளப்படுவார்கள். நன்றாகப் படித்து பாடங்களை மூளையில் ஏற்றிக் கொண்டாலும் தேர்வின்போது அவற்றை நினைவுபடுத்தி எழுதுவதற்கு துணை செய்யும் மூளையின் காக்நெட்டிவ் ஃபங்ஷன் தடைப்பட்டு விடும். இதன் தொடர்ச்சியாக ஒற்றைத் தலை வலி வரலாம்.

தொடர்ந்து பீர் அருந்தும் மாணவர்கள், இளைஞர்களின் ஜீரண மண்டலம், சிறுநீரகம், கல்லீரல், இதயம் போன்றவை மெல்ல மெல்ல பழுதடையத் தொடங்கும். இந்த உறுப்புகளின் பாதிப்பு ஒருபுறம் என்றால் முதுமைத் தோற்றம், சர்க்கரை நோய், அதன் தொடர்ச்சியாக ஆண்மைக் குறைவு போன்றவையும் தவிர்க்க முடியாத கூடுதல் தாக்குதல்கள்."

காஃபெய்ன் (காப்பியில் உள்ள நச்சு) நிறைந்த கோக் போன்ற குளிர்பானங்கள் அருந்துவதே உடல் ஆரோக்கியத்துக்கு ஆபத்து என்று நிரூபிக்கப்பட்டு வரும் இன்றைய சூழ்நிலையில், பீர் பழக்கத்துக்கு எளிதில் ஆளாகி வரும் இந்திய இளைஞர்களைப் பற்றி அரசுகள் எந்த விதத்திலாவது கவலைப்படுகின்றனவா? சிறிதளவு ஆல்கஹால், அதிகளவு ஆல்கஹால் என எல்லா வகை பீர்களுக்கும் ஒரே மாதிரியான வரி விதிப்பையே மாநில அரசுகள் பின்பற்றி வருகின்றன. துரதிருஷ்டவசமாக ஸ்ட்ராங் பீர் சாப்பிடுவதையும், போதையில் லயிப்பதையுமே இந்திய இளைஞர்கள் விரும்புகிறார்கள். இப்போதைக்கு தேர்வுகளிலும் மதிப்பெண்களிலும் எதிரொலித்திருக்கும் இது, எதிர்காலத்தில் எங்கு போய் முடியுமோ?

- கட்டு


• ஷங்கர்


• ஹரி

# ரஜினி

'சந்திரமுகி'யை வெற்றிப் படமாக்கி விட்டு ரஜினி அமைதியாகிவிட, கோலிவுட் அவரின் அடுத்த படத்தைப் பற்றி அசை போட ஆரம்பித்து விட்டது. இமயமலைக்குச் சென்றுவிட்டு அண்மையில் சென்னை திரும்பின ரஜினியும் இதை உணர்ந்து, தமது மாப்பிள்ளை தனுஷின் அக்கா திருமணத்தில் கலந்து கொண்ட கையோடு, தனது அடுத்த படம் குறித்த முக்கிய முடிவுகள் சிலவற்றை எடுத்திருக்கிறார். சந்திரமுகி தந்த சந்தோஷம், அவரை உடனே அடுத்த படம் பண்ண தூண்டியிருக்கிறது. தனது ரசிகர்களை இனியும் ஏமாற்ற விரும்பாதவர், இனி வருடத்துக்கு ஒரு படம் நடித்து விடும் முடிவுக்கு வந்திருப்பதாகச் சொல்கிறார்கள். சூட்டோடு சூடாக கதை கேட்கத் தொடங்கியிருப்பவர், தனது அடுத்த படத்தைத் தயாரிக்க மூன்று தயாரிப்பாளர்களை முதல் கட்டமாக டிக் செய்திருக்கிறார். புஷ்பா கந்தசாமி, ஆர்.எம்.வீரப்பன், எடிட்டர் மோகன் ஆகிய மூவர்தான் அவர்கள் என்கிறார்கள் ரஜினிக்கு நெருக்கமானவர்கள். கூடவே "இவர்களில் யாரை அவர் தேர்ந்தெடுப்பார் என்பது அவருக்கும் அந்த அருணாசலேஸ்வரருக்கும் மட்டுமே தெரிந்த ரகசியம்" என்கிறார்கள்.

"கவிதாலயாவுக்காக போன முறையே ரஜினி படம் செய்ய வேண்டியது. எப்படியோ மிஸ்ஸாயிடுச்சு. ஆனா இந்த முறை தப்பாது. நிச்சயம் தன்னோட குருநாதருக்காக அவர் படம் பண்ணுவார்" என்று நம்பிக்கையுடன் பேசுகிறார் ரஜினி அலுவலக ஊழியர் ஒருவர்.

இயக்குநர் ஹரி சரத்குமாரை வைத்து இயக்கின 'ஐயா' கதை, ரஜினிக்காக உருவாக்கப்பட்டதென்பது ஊரறிந்த உண்மை. அப்படத்தை தயாரித்தது கவிதாலயா. ரஜினி நடிப்பதற்காகவே பிரத்யேகமாக ஹரியிடம் கதை பண்ணச் சொன்னதாகவும், ஏதோ காரணத்தால் அந்தக் கதை ரஜினிக்குப் பிடிக்காமல் போனதாகவும் சொல்கிறார்கள். முன்பு போல் இல்லாமல் இந்த முறை ரஜினியை அசத்துமளவுக்கு கதை தயாராகிறதாம் கவிதாலயா வட்டாரத்தில். இந்த விஷயங்களையெல்லாம் சேர்த்து ரஜினி நிச்சயம் கவிதாலயாவுக்கு கால்ஷீட் கொடுப்பார் என்று பேசிக் கொள்கிறார்கள். அது உண்மையாக இருக்கும் பட்சத்தில் அப்படத்தை ஹரியே இயக்குவாரென்றும் கூறப்படுகிறது. ஆனால் இது எதையும் அதிகாரபூர்வமாக கூற மறுக்கிறார்கள். ரஜினி வாய் திறக்கும் முன் பேசுவது நன்றாக இருக்காது என்று கருதுவதாகக் கூறப்படுகிறது.

ரஜினியின் லிஸ்ட்டில் அடுத்து இருப்பது ஆர்.எம்.வீரப்பன். 'பாட்ஷா' படம்



# புதுப்படம்! லேட்டஸ்ட் நிலவரம்!

மூலம் ரஜினிக்கு மகத்தானதொரு முகத்தை ஏற்படுத்தியதில் ஆர்.எம்.வீக்கு அபார பங்குண்டு. ரஜினியே பல இடங்களில் இதனை வெளிப்படுத்தியிருக்கிறார். நீண்ட காலமாகவே படம் எதையும் தயாரிக்காத ஆர்.எம்.வீ., 'மீண்டும் படம் எடுத்தால் ரஜினியை வைத்துத்தான் எடுக்க வேண்டும்' என்கிற முடிவோடு இருந்ததாகவும், அதன் காரணமாகவே சந்திரமுகி முடிந்ததும் கால்ஷீட் கேட்டதாகவும் சொல்லப்படுகிறது. உண்மையாகச் சொல்லப் போனால் ஆர்.எம்.வீ 'பாபா' முடிந்த கையோடு கால்ஷீட் கேட்டாராம். 'ரிசல்ட் வரட்டும்' என்று ரஜினி கூற, பாபா ரசிகர்களைக் கவரத் தவறியதில் ரஜினி அப்செட். இதனால் அப்போதைக்கு படம் பண்ணும் ஐடியாவையே ரஜினி டிராப் பண்ணி விட்டாராம். இதனால்தான் ஆர்.எம்.வீயும் அமைதி காத்து வந்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. இடையில் 'சந்திரமுகி' தொடங்கும்போது, ஆர்.எம்.வீ. தவறாக



• ஜெயம் ரவி, ராஜா, எடிட்டர் மோகன்

நினைத்து விடுவார் என்று கருதி ரஜினியே அவரை சமாதானப் படுத்தினாராம். "இந்தக் கணக்கையெல்லாம் கூட்டிக்கழித்துப் பார்த்தால், ரஜினி இப்போது நிச்சயம் ஆர்.எம்.வீயின் சத்யா மூவிஸுக்குத்தான் படம் பண்ணுவார்" என்கிறார்கள் விவரமறிந்தவர்கள். ஆனால் எந்தவித அலட்டலுமில்லாமல் அமைதியாக இருக்கிறது சத்யா மூவிஸ் வட்டாரம். அலுவலகத்தின் கடைநிலை ஊழியர் கூட 'ரஜினி' என்றதும் வாய்மூடிக் கொள்கிறார். நேரடியாக ஆர்.எம்.வீயையே கேட்டபோது,

"சத்யா மூவீஸ் என்பது எந்த நேரமும் படமெடுக்கத் தயாராக இருக்கக்கூடிய நிறுவனம். அது ரஜினி படமாக இருந்தால் கூடுதல் சந்தோஷத்துடன் தயாரிப்போம்... இப்படித்தான் திடீரென ரஜினியை வைத்து 'பாட்ஷா' படம் பண்ணினோம். அது எப்படிப்பட்ட மாற்றத்தை ஏற்படுத்தியது என்பது அனைவருக்குமே தெரிந்தது தான். ஆகவே மீண்டும் அப்படியொரு படத்தை ரஜினி செய்ய விரும்பினால் அதைத் தயாரிக்க நான் தயாராகவே இருக்கிறேன்" என்றார்.



• புஷ்பா கந்தசாமி



• ஆர்.எம்.வீ

லிஸ்ட்டில் மூன்றாவதாய் வந்தாலும் ரஜினியைப் பொறுத்தவரை முதலிடத்தில் இருக்கும் தயாரிப்பாளராகச் சொல்லப்படுவது எடிட்டர்

மோகன்தான். பல பத்திரிகைகளாலும் உறுதி செய்யப்பட்ட தயாரிப்பாளராகவும் தான் இருப்பது, கூடுதல் சந்தோஷத்தை அளித்திருக்கிறதாம் எடிட்டருக்கு. "ரஜினியை வைத்து படமெடுக்கவிருப்பதால்தான் தனது மகன் ஜெயம் ரவியை வைத்து உடனடியாக புதுப்படத்தை ஆரம்பிக்கவில்லை மோகன். முழுக்க முழுக்க வெளிப்படங்களுக்கு அவரை தாரை வார்த்துவிட்டார்" என்கிறார்கள்.



• தரணி

ரஜினியை வைத்து அவர் தயாரிக்கும் படத்துக்கு வழக்கம்போல் அவரது மகன் ராஜாதான் இயக்குநராம். கதை டிஸ்கஷன் ஆரம்பித்து விட்டதென்றும், தமிழ் சினிமாவின் பல இயக்குநர்களுக்குக் கதை விற்கும் டைரக்டர் 'அலாவுதீன்' சக்ரவர்த்தியின் கதையைத்தான் ரஜினிக்காக ரெடி செய்கிறார்கள் என்பதும் பேச்சு. ஜெயம் ரவியை ரஜினியுடன் நடிக்க வைக்க முடிவு செய்திருப்பதாகவும் கூறப்படுகிறது. ரஜினி படத்தை எப்படியும் சக்சஸ் பண்ணி விடுவதென்று கங்கணம் கட்டிச் செயல்படுகிறாராம் ராஜா. இதனால் ஒரு பெரிய ஹீரோ படத்தை இயக்க வந்த வாய்ப்பையும் நிராகரித்து விட்டதாகத் தகவல்.

இதெல்லாம் ஒருபுறமிருக்க, இன்னொரு தரப்பினரின் பேச்சு வேறு மாதிரி இருக்கிறது. "ரஜினி தனது அடுத்த படத்துக்கான இயக்குனரை முடிவு செய்து விட்டார். அது ஷங்கர், வாசு அல்லது கே.எஸ். ரவிக்குமார்தான்" என்கிறார்கள். அதற்கு அவர்கள் வலுவான காரணங்களையும் முன் வைக்கிறார்கள்.

"ஜக்குபாய் படம் பண்ணலாம் என்று கே.எஸ்.ரவிக்குமாரை ஆசையாய்க் கூப்பிட்டு டிஸ்கஷன் நடத்தி, விளம்பரம் கொடுத்து, கடைசியில் ரஜினி அதனை ட்ராப் செய்துவிட்டார். இதில் உண்மையில் ரஜினிக்கு ஏக வருத்தம். ஜக்குபாய்க்காக நீண்ட நாட்கள் ரவிக்குமார் காத்திருந்தது அவருக்குப் பெரும் மனக் கஷ்டத்தைக் கொடுத்து விட்டது. அதற்குப் பிராயச்சித்தமாக தனது அடுத்த படத்தின் இயக்குனராக ரவிக்குமாரையே அறிவித்தாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை. அதே நேரத்தில் 'சந்திரமுகி' மூலம் தனக்கு மிகப்பெரிய ப்ரேக் கொடுத்த வாசுவையும் எளிதில் மறந்துவிட அவருக்கு விருப்பமில்லை. நன்றிக்கடனாக தனது அடுத்த படத்தை இயக்கும் வாய்ப்பை அவருக்கேகூட கொடுக்கலாம்" என்கிறவர்கள், இன்னொரு விஷயத்தையும் கூறத் தவறவில்லை.

"ரஜினிக்கு நீண்ட நாட்களாகவே டைரக்டர் ஷங்கரின் இயக்கத்தில் நடிக்க ஆசை. இந்தியன், முதல்வன் என்று அவரின் பல படங்களால் பெரிதும் கவரப்பட்டவர் ரஜினி. தற்போது ஷங்கர் அந்நியனை முடித்துவிட்ட நிலையில், அடுத்து ஏன் ஷங்கரின் இயக்கத்தில் நடிக்கக் கூடாது என்று அவருக்கு யோசனை எழுந்துள்ளது. ஷங்கருக்கும் ரஜினியுடன் படம் பண்ணுவது நீண்ட நாள் கனவு. இந்நிலையில் இருவரும் இணைவது மிரட்டலான படமாக இருக்கும். அப்படி மிரட்டிப் பார்க்கத்தான் சூப்பர் ஸ்டார் நினைக்கிறார்" என்கிறார்கள்.

இதற்கிடையில் ரஜினியின் அடுத்த படத்தை இயக்க தரணியும் மிக ஆவலோடு இருக்கிறார்.

"ரஜினி படங்களைப் பார்த்துத்தான் நான் சினிமாவுக்குள்ளேயே நுழைந்தேன். எனது ஆக்ஷன் படங்களைப் பார்த்து இதில் ரஜினி நடித்தால் இன்னும் சூப்பராக இருக்குமே என்று மற்றவர்கள் கூறுவது எனக்கு பெருமிதமான விஷயம். ரஜினியும் பலமுறை எனது படங்களைப் பாராட்டியுள்ளார். இப்பொழுது ரஜினிக்காக ஒன் லைன் ஸ்டோரி ஒன்றை ரெடியாக வைத்திருக்கிறேன். அவர் மட்டும் க்ரீன் சிக்னல் கொடுத்தால் போதும், அதற்கு பரபரப்பான திரைக்கதை அமைத்து ஒரு நெத்தியடியான படத்தை ரஜினி ரசிகர்களுக்கு வழங்க நான் ரெடியாக இருக்கிறேன்" என்றார் நம்மிடம்.

• பி.வாசு



மொத்தத்தில் இவர்தான் தயாரிப்பாளர், டைரக்டர் என்று பல தகவல்கள் ஃபீல்டில் உலவினாலும், நிர்ணயிக்க வேண்டிய சக்தியாக இருப்பதென்னவோ சூப்பர் ஸ்டார்தான். அவர் வாய் திறக்காத வரை எதுவும் நிரந்தரமில்லை.

- தெனாலி

# உமது முன்னோர் உம்மை வாழ்த்தட்டும்!

"நாமும் நம் சந்ததியினரும்
நன்றாக இருக்கவே, நம் முன்னோர்க்கு
பித்ரு கர்மா செய்ய வேண்டும்."

--காஞ்சி ஸ்ரீ பரமாச்சாரியார்

"நாம் பித்ரு கர்மா செய்வதினால், பித்ரு தேவதைகள் திருப்தி
அடைந்து நம்மை ஆசீர்வதிப்பதால் நம் சந்ததியினர்கள்
மேன்மை அடைகிறார்கள்."

--முக்கூர் ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மாச்சாரியார்

---

## மத்ய கைலாஸத்தில்

# பித்ரு கர்மா

---

♦ மத்ய கைலாஸத்தின் மூலக்கடவுளாகிய ஸ்ரீ ஆனந்த விநாயகரே, உங்களுக்காக "கர்த்தா"வாக பொறுப்பேற்று இந்த முன்னோர் வழிபாட்டைச் செய்வித்து அருள் புரிகிறார்.

♦ பித்ருக்களின் சஞ்சார சமயமான மதியம் 12 மணியளவில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அருளுடன், பித்ரு தேவதைகளான ஸ்ரீருத்ரன் (ஸ்ரீ பரமேஸ்வரன்) மற்றும் ஸ்ரீ ஆதித்தியன் ஆகியோரிடம் முறைப்படி வேண்டியபின், பத்ரி மேடையில் உங்கள் சார்பாக உங்கள் முன்னோர்களுக்கு பிண்டம் சமர்ப்பிக்கப்படுகிறது.

♦ வட இந்தியாவில் அமைந்திருக்கும் கயை மற்றும் பத்ரிநாத்திற்கு இணையாக இந்த முன்னோர் வழிபாட்டினை, முறையாகவும் முழுமையாகவும், மத்ய கைலாஸத்தில், நிறைவேற்ற இயல்கிறது என்பது இங்கு பித்ரு கர்மா செய்து வருவோரின் ஆத்ம அனுபவமாகும்.

விவரங்கள்:

1. இந்த முன்னோர் வழிபாட்டினை ஆண்கள் மற்றும் பெண்களும் செய்யலாம்.
2. சாதி, இன பாகுபாடு கிடையாது.
3. விருப்பத்திற்கு உகந்த எவர்க்கு வேண்டுமானாலும் செய்யலாம்.
4. ஒரு முறை கட்டளைத் தொகையைச் செலுத்தினால், கட்டளைதாரர்கள் வாழ்நாள் முழுதும் பித்ருகர்மா நடத்தப்படும். சில கட்டளை வகைகளில், கூடுதல் மூதலீடு இன்றி, இத்திட்டம் தலைமுறை தலைமுறையாகத் தொடர வாய்ப்புண்டு.

மேலும் விவரங்களுக்கு :

www.madhyakailas.org
✆ 91-44-2235 0859, 22300936.



Sri Ananda Vinayakar Charitable Foundation (Madhya Kailas) No 1, Sardar Patel Road, Tharamani Post, Chennai - 600 113, Tamil Nadu, India

கல்கி

யார் இந்த சூர்யா?

# வட்டமேஜை

'விடுமுறை' கட்டுரை கள்வர்களிடமிருந்து காத்துக் கொள்ள உதவியது.
திருவெறும்பூர், ஆர். ராஜ்குமார்

வெடிக்கிறார், அலறுகிறார், உருகுகிறார் என்று குமுறல்களை வெளியிட்டு பரபரப்பை ஏற்படுத்தி விட்டது கல்கி.
இனாம் மணியாச்சி, ச.ஆ. கேசவன்

'யார் இந்த சூர்யா?' பர்சனல் டைரி ஆரம்பமே படு விறுவிறுப்பு! அவரது மனம் திருந்திய ரசிகர் பற்றிய சம்பவம் கண்களைக் குளமாக்கியது!
பள்ளம்பட்டி, த. அசாருதீன்

காதலர்கள் உணர்ச்சிபூர்வமாக முடிவெடுக்கக்கூடாது என்பதை நயமாக நன்கு வெளிப்படுத்தி இருந்தார் சென்னை மாநகர ஆணையாளர் நட்ராஜ்.
சென்னை - 70, நா. பாலசுப்பிரமணியன்

'காப்பியடிக்க உரிமை கொடுங்கள்' யோசனையை ஏற்றுக் கொள்ள 'வேண்டிய நிர்ப்பந்தம் இன்றைக்கு உருவாகிவிட்டது!
ஈரோடு - 1, ரேவதிப்ரியன்

தாரம் வந்த பிறகு தாயைப் புறக்கணிக்கும் சிலரை, தராசின் பதில் நிச்சயம் சிந்திக்க வைக்கும்.
திருவாரூர், டி.முருகேசன்

பிரதமரின்



## வாரம் ஒரு வாசகர்!

பிரதமர் வீட்டையே மூன்றரை கோடிக்கு விலை பேசி, காஸ்ட்லி அல்வா கொடுத்த ஆசாமியின் துணிச்சலான கிரிமினல் செய்தி, சரியான மலைப்புச் செய்தி!
பெங்களூர், யமுனா ரெங்கநாதன்

# காஸ்ட்லி அல்வா!

அறிக்கை மட்டும்தானா அக்ஷர லக்ஷம் பெறும்... இந்த வார 'கல்கி'யின் தலையங்கமும்தான்!
சென்னை, ச. இராசன்

குடும்பத்தில் எல்லாரும் பகிரங்கமாகப் படிக்கக்கூடிய வார இதழான கல்கி, சமீபகாலமாக இளமையாக, இனிமையாக வலம் வருகிறது, வாழ்த்துக்கள்!
சென்னை - 28, அனந்தராமன்

### கே.எஸ். ரவிகுமார் மறுப்பு!

என்னை பேட்டி கண்டு அதை 22.05.2005 கல்கி இதழில் வெளியிட்டுள்ளீர்கள். சில விஷயங்களைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன்:
1. 'ரஜினியால் சும்மா கிடந்தேன்' என்ற தலைப்பு வரியே நான் கூறியது இல்லை.
2. 'நான் இயக்கிக் கொண்டிருக்கும் படத்தின் தயாரிப்பாளர், பட விஷயத்தை விட்டுவிட்டு, வேறு விஷயத்தில் கவனம் செலுத்துகிறார்' என்ற வரிகள் நான் கூறாதவை.
3. 'தமிழ் இயக்கத்துக்குப் பாடுபடுபவர்களை கண்டு எனக்கு எந்த பயமும் இல்லை' என்ற வரிகள் நான் கூறாதவை.
4. 'ரஜினி என்னை அழைக்கட்டும். அதற்குப் பிறகுதான் ஸ்டோரி டிஸ்கஷன் போறதா, வேண்டாமான்னு யோசிக்க முடியும்' என்ற வரிகள் நான் கூறாதவை.
5. 'ஆர்ட் பிலிம், அவார்டு பிலிம் எடுப்பதற்கு நான் ஒன்றும் முட்டாள் இல்லை' என்ற வாக்கியம் நான் கூறாதது.
சென்னை - 33, கே.எஸ். ரவிகுமார்



# ஃபெயிலாகிப் போன பாஸ்வான்!

பீஹார், கடந்த சில ஆண்டுகளாகவே சர்ச்சைக்குரிய மாநிலமாக இருந்து வருகிறது. சர்ச்சையின் ஊற்றுக்கண்ணாக இருந்தவர் லல்லுபிரசாத் யாதவ். ஊழல் குற்றச்சாட்டுகளின் இருப்பிடமாகவும் உருக் கொண்டார் அவர். இதை உணர்ந்ததனால்தானோ என்னவோ, பீஹார் வாக்காளர்கள் அவரது கட்சிக்குப் பெரும்பான்மை வாக்குகளை அளிக்கவில்லை. பீஹாரில் எந்தக் கட்சிக்குமே தனிப்பெரும்பான்மை கிடைக்கவில்லை என்பதால், அம்மாநில மக்கள் எந்தக் கட்சியையும் முழுமையாக நம்பி ஆட்சிப் பொறுப்பை ஒப்படைக்கத் தயாராயில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. இச்சூழலில், கூட்டணி ஆட்சி ஒன்றுதான் தீர்வு. ஆனால் அந்தத் தீர்வுக்குக் குறுக்கே நின்று முட்டைக்கட்டையும் போட்டுத் தொலைத்தார், லோக் ஜன சக்தி கட்சியின் தலைவர் ராம்விலாஸ் பாஸ்வான்.

பாஸ்வானின் கட்சி ஜெயித்ததோ 29 இடங்களில் மட்டுமே. தனிக்கட்சியாக அவரது கட்சி ஆட்சி அமைத்திருக்கவே முடியாது. பாரதிய ஜனதா கூட்டணியையோ (என்.டி.ஏ) அல்லது காங்கிரஸ் கூட்டணியையோ ஆதரிப்பதைத் தவிர அவருக்கு வேறு வழி இருக்கவில்லை.

ஆனால், பாஸ்வான் 'ஊருக்கெல்லாம் ஒரு வழி என்றால், ஒன்றரைக் கண்ணனுக்கு ஒரு வழி' என்பதாகச் செயல்பட்டார். 95 இடங்களைப் பெற்ற ராஷ்ட்ரிய ஜனதா தளம் - கம்யூனிஸ்ட் - காங்கிரஸ் (10) அணியையும் ஆதரிக்கவில்லை; 37 இடங்களைப்




கல்கி



2005 ஜூன் 5
பார்த்திப வைகாசி 22
மலர் : 63
இதழ் : 45




பெற்ற பா.ஜ.க - ஜனதாதளம் (55) அணியையும் ஆதரிக்கவில்லை! இரு அணிகளையும் நிராகரித்துவிட்டு, 'பீஹாரில் ஜனாதிபதி ஆட்சி வந்தாலும் பரவாயில்லை, இவர்களுக்கு நான் ஆதரவு தர மாட்டேன்' என்று பிடிவாதம் பிடித்தார்.

இந்தப் பிடிவாதத்துக்கு பலியானவர்கள் மாற்று அரசை விரும்பிய மக்கள்தான். பாஸ்வானின் மூர்க்கத்தனத்தால் மாற்று அரசுக்கு வழியில்லாமல் போனதோடு, இப்போது மறு தேர்தல் என்னும் சுமையும் பீஹார் மக்களை எதிர்நோக்குகிறது.

பாஸ்வான் மட்டும் ஏதேனும் ஓர் அணிக்கு ஆதரவு தெரிவித்து, ஆட்சி அமைக்க வழி வகுத்திருந்தால், அந்த ஆதரவையே ஆயுதமாக்கி பிரதான ஆளும் கட்சியை நல்லாட்சியும் ஊழலற்ற நிர்வாகமும் வழங்க நிர்ப்பந்தப்படுத்தியிருக்கலாம். நல்லதொரு ஆதரவுக் கட்சியாக விமர்சனப் பார்வையுடன் பிரதான ஆளுங்கட்சியைக் கண்காணித்திருக்கலாம். பீஹார் மக்களும் அதற்கு மனம் மகிழ்ந்து, அடுத்த தேர்தலில் பாஸ்வானின் கட்சிக்குக் கூடுதலான இடங்களைக் கிடைக்கச் செய்திருப்பார்கள்.

ஆனால், யானை தானே தன் தலையில் மண்ணை அள்ளிப் போட்டுக் கொண்டதுபோல், பாஸ்வான் அந்த வாய்ப்புகளைக் கெடுத்துக் கொண்டு விட்டார்!

தேர்தல் முடிந்து மூன்று மாதங்கள் ஆகியும் பீஹாரில் ஓர் அரசு அமைக்கப்படாத நிலையில், பாஸ்வான் கட்சி எம்.எல்.ஏக்களே பொறுமை இழந்து, பா.ஜ.கவின் குதிரை வியாபாரத் தூண்டிலில் சிக்கி விட்டனர். "குதிரையாவது, வியாபாரமாவது!" என்று பாஸ்வான் இதை மறுப்பதுதான் வேடிக்கை!

ஏனெனில், பா.ஜ.க அணியை ஆதரிக்கச் சம்மதித்த சில எம்.எல்.ஏக்கள், ஜார்க்கண்டுக்குக் கடத்திச் செல்லப்பட்டு விட்டனர். அங்கே, வழக்கமான 'புனித' அரசியலின் 'பாரம்பரை' முறைப்படி அவர்கள் ஐந்து நட்சத்திர உபசரணையில் மூழ்கடிக்கப்பட்டனர்! இவர்களில் யாருமே தாங்கள் கடத்தப்பட்டதாகப் புகார் கூறவில்லை என்பதால், பணத்தாசையும் பதவி ஆசையும்தான் இந்த எம்.எல்.ஏக்களை இயக்குகின்றன என்பது நன்றாகவே தெரிகிறது.




ஆகவே இந்தச் சூழ்நிலையில் சட்டசபையைக் கலைப்பதாக அறிவிப்பதைத் தவிர, வேறு வழி இல்லை மத்திய அரசுக்கு.

இந்த அறிவிப்பை பா.ஜ.கவும் பாஸ்வானும் எதிர்ப்பதுடன், அரசியல் உள்நோக்கம் கற்பித்து விமர்சிக்கின்றனர். சட்டசபை கலைப்பைச் சிபாரிசு செய்த பீஹார் ஆளுநர் பூடாசிங், காங்கிரஸ் ஆதரவாளர் என்பதால், பா.ஜ.கவின் விமர்சனம் வலுப்பெறத்தான் செய்கிறது. எனினும், பிரதமர் மன்மோகன்சிங் தமது தீவிரமான அறிக்கையில், 'ஆளுநர் சிபாரிசு மட்டுமின்றி, சட்டம் ஒழுங்கு குறித்த ரகசியத் தகவல்களும்கூட இந்தக் கலைப்புக்குக் காரணம்; குதிரை வியாபாரம் நடந்ததற்குச் சாட்சிகள் உண்டு' என்று தெளிவுபடுத்தியுள்ளார்.

ஆட்சி அமைக்கும் வாய்ப்பும் சூழலும் இருந்தும் மூன்று மாதங்களைக் கடத்திவிட்டு, இப்போது கட்சித் தாவல், குதிரை வியாபாரம் என்று இறங்குவோர், மக்கள் நலனை விரும்புவோராக எப்படி இருக்க முடியும்!

பீஹார் மக்கள் இந்த விஷயத்தை உணர்ந்து, வெறுப்பு மிகுதியில், வரவிருக்கும் மாநில பொதுத் தேர்தலில் திரும்பவும் லல்லுவின் ராஷ்ட்ரிய ஜனதா தளத்துக்கே வாக்களித்து ஆட்சியில் அமர்த்தினாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை!

தமது சுயநலத்தினால் பாஸ்வான், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சட்டசபையை திரிசங்கு நிலையிலேயே இருக்க வைத்ததுடன், அதைக் கலைக்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கும் மத்திய அரசை உள்ளாக்கியிருக்கிறார்.

இவ்வாறு கலைத்தது ஜனநாயக விரோதம்; தன்னால் பெரும்பான்மையை நிரூபித்து ஆட்சி அமைத்திருக்க முடியும் என்று பா.ஜ.க இப்போது அலறுவதுடன் கதவடைப்பு, கலவரம் என்றும் இறங்கியிருக்கிறது.

ஒரு கட்சியின் ஆதரவு பெற்று கூட்டணி ஆட்சியமைப்பது வேறு; ஒரு கட்சியை உடைத்து, விலைக்கு வாங்கிய எம்.எல்.ஏக்கள் உதவியுடன் ஆட்சி அமைப்பது வேறு என்ற அடிப்படை உண்மை பா.ஜ.க தலைவர்களுக்குத் தெரியாதது அல்ல... அது மக்களுக்குத் தெரியாது என்று அவர்கள் நினைப்பதுதான் பரிதாபம்! ○

# நீங்கள் கேட்டவை

● ஆர்.எம்.ஈ. மலை, குடியாத்தம்

? ஆஹா, ஓஹோ என ஆரம்பிக்கப்பட்ட டி.டி.எச், தற்போது அதன் ஒளிபரப்பு உரிமையை சன் டீ.விக்கு வழங்கும் நிலைமை வந்து விட்டதே! நிலைமை அவ்வளவு கவலையளிக்கிறதா?

! வழக்கு போட்டாச்சு என்பதால் சன் டீ.விக்குக் கவலை. டீ.வி. பார்ப்போரின் கவலை வேறு. மூவாயிரம் நாலாயிரம் முதலீடு; முன்னூறு நானூறு கட்டணம் என்றெல்லாம் இல்லாமல், விரும்பிய சானலைப் பார்க்கும் காலம் வருமா - ரேடியோ போல?

● எம்.சிவகுருநாதன், தஞ்சை

? காஞ்சிபுரம் சட்டமன்ற இடைத் தேர்வில் அ.தி.மு.க. ஆட்சிக்கு எதிராக சங்கரமடம் வகுத்த வியூகம் தோற்றது என்று தி.க. தலைவர் கி.வீரமணி ஓர் அறிக்கையில் கூறியுள்ளது குறித்து...?

! 'success has several fathers. Failure is an orphan' என்ற வழக்குதான் ஞாபகம் வருகிறது.

● ஜி.ராமதாஸ், உள்ளிக்கடை

? கூட்டணி ஆட்சி என்பதற்காக லல்லு போன்றவர்களை அனுசரித்துச் செல்ல வேண்டியது அவசியம்தானா?

! அவசியமில்லை இலட்சிய நோக்கு அவசியம்தான் யதார்த்த நோக்கு.

● வீர செல்வம், பூம்புகார்

? இடைத்தேர்தல் வெற்றி ஆளுங் கட்சிக்குப் பொதுத் தேர்தலுக்கான தெம்பைத் தருமா...?

! தரும். அந்தத் தெம்பு தன்னம்பிக்கையை வளர்த்தால் தரும். அளவு மிஞ்சிய தைரியத்தை வளர்த்தால் ஆபத்தில் முடியும்.

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

? எல்லா வீடுகளுக்கும் கதவுகள் உண்டு. வீட்டை விட்டு வெளியேற விரும்புவோர் அவரவர் விருப்பப்படி வெளியேறலாம் என்று கூட்டணிக் கட்சிகள் பற்றி தி.மு.க. தலைவர் கூறியுள்ளாரே?

! நல்ல வேளை 'வீடு' என்று சொன்னார்; 'சத்திரம்' என்று சொல்லியிருந்தால் தான் ஆபத்து!

● டி.முருகேசன், திருவாரூர்

? சென்னை முழுவதும் சிம்பு - நயன்தாரா ஆபாச போஸ்டர்கள் ஒட்டி அசிங்கப்படுத்தியது பற்றி...?

! கமிஷனர் நடராஜ் உபயத்தால் அந்தக் கண்ணராவியை ரொம்பப் பேர் பார்க்கவில்லை. ஆனால் சமீபத்தில் விஜய் டீ.வியில் பேட்டி தர வந்திருந்த சிம்பு அணிந்திருந்த டீ-ஷர்ட் வாசகம் மிகக் கண்ணராவி... அதற்கு யாரும் தடை விதிக்க முடியலையே!

● ஆர். ராமசுப்ரமணியன், வடவள்ளி

? இயந்திர வாக்குப் பதிவின் நம்பகத்தன்மை பற்றி ஜெ. இப்போது என்ன சொல்வார்?

! முதல்வரான கையோடு தாம் பிறப்பித்த பல உத்தரவுகளை வாபஸ் பெற்றுக் கொண்ட மாதிரி, எந்திர



• அத்துமீறல் ஆடை!



• 'வெற்றி'யில் பங்கு!



• 'திறந்த' அறிக்கை



• சைலண்ட் வாபஸ்!

# இன்பம், துன்பம் - இடைவெளி எத்தனை தூரம்?

வாக்குப் பதிவு குறித்த தமது அவநம்பிக்கையையும் வாபஸ் பெற்றுக் கொண்டிருப்பார், சைலண்டாக. வேறு வழி!

● **ஜி.செந்தில்வேல், சென்னை - 29**

**? இந்தியா மாதிரி பெண்ணடிமை சமூகத்தில் ஒரு பெண்ணை வெளிநாடு அனுப்பி படிக்க வைப்பது தான் விசேஷம் என்கிறாரே கமல்ஹாசன்?**

! கமல்ஹாசன் மகள்/கள் வெளிநாடு போய்ப் படிப்பது ஒன்றும் விசேஷமோ அதிசயமோ அல்ல... இன்று அந்த வாய்ப்புக் கிடைத்தால் எல்லா பெற்றோருமே பெண்களை அயல்நாடு அனுப்பத் தயார்தான்.

• 'விசேஷ' விளக்கம்!

● **ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்** ❐

**? 'ஜெயலலிதா வழக்குகளை மட்டும் நீதிமன்றத்தில் துரிதப்படுத்துவது ஏன்?' என்று அவரது வக்கீல் நீதிமன்றத்தில் முறையிட்டுள்ளாரே...?**

! இந்த வாதமே பலவீனமானது. ஜெயலலிதா குற்றமற்றவர் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தால், 'வழக்கை சீக்கிரம் முடியுங்கள்' என்றல்லவா கோரிக்கை விடுக்க வேண்டும்!

● **கன்னிசுப்பிரமணியன், ஈரோடு-1**

**? மத்தியில் ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சிக்குப் பிரதமர் பத்துக்கு ஆறு மதிப்பெண் கொடுத்துள்ளாரே...**

! பத்துக்குப் பத்து மார்க் போட்டால் தான் நகைப்பார்கள். மனசாட்சியோடு கொஞ்சம் தாராளமாக ஆறு மார்க் போட்டிருக்கிறார். வரும் வருடங்களில் கூடுதல் மார்க் எடுத்து மக்களை மகிழ்விப்பாராக.

● **வே.ந.கதிர்வேல், வேலூர்-6**

**? சிவகாசி ஜெயலட்சுமிக்கு போலீஸ் பாதுகாப்பு அளிக்கப்பட்ட வகையில், இது வரை ரூ.14,70,750 செலவாகியுள்ளதாமே! மக்களின் வரிப் பணத்தை இப்படியா வீணடிப்பது?**

! அவருக்குப் பாதுகாப்புத் தரப்படாமலிருந்து ஏதாவது நேர்ந்திருந்தால் இந்தக் கேள்வியே வேறுவிதமாக அமைந்திருக்கும்! ஜெயலட்சுமியைப் பாதுகாப்பதன் மூலம் அரசுக்குப் பல ஊழல் பெருச்சாளிகளையும் காமுக காவல் அதிகாரிகளையும் அடையாளம் காண முடிந்தது. இதையொட்டி அரசு என்ன

**தராசு**



• அதிரடி தடை!



• முதல் கோணல்!

நடவடிக்கை எடுக்கிறது; என்ன பாடம் கற்கிறது என்பதைப் பொறுத்தே வீண் செலவா, இல்லையா என்பதை நிர்ணயிக்க முடியும்.

● க.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்

? ஆஸ்திரேலிய பாதிரியார் எரித்துக் கொல்லப்பட்ட வழக்கில் குற்றவாளி தாராசிங்குக்கு வழங்கப்பட்ட மரண தண்டனையை ஆயுள் தண்டனையாக மாற்றி, தண்டனை பெற்ற மேலும் பதினொரு பேரை விடுதலையும் செய்து விட்டதே ஓரிஸ்ஸா உயர்நீதிமன்றம்?

! பகிரங்கக் கொலை என்றால் கூட சாட்சியங்கள் சமர்ப்பிக்கப்படும் விதத்தில்தான் வழக்கு நிற்கும் அல்லது விழும். மாஜிஸ்திரேட் கோர்ட்டில் 'குற்றம் புரிந்திருக்கக் கூடும்' என்ற நிலையிலேயே செஷன்ஸுக்கு அனுப்பிவிடுவார்கள். செஷன்ஸில் சாட்சியம் இருக்கிறதா என்று பார்த்து தண்டனை விதிப்பார்கள். உயர்நீதிமன்றம், சாட்சியங்கள் வலுவாக உள்ளனவா என்று ஆராய்ந்து தண்டனையைத் திருத்தும். எல்லாமே, நீதிமன்றத்தில் துளியும் அநீதி நிகழ்ந்து விடக்கூடாது என்பதற்காகத்தான்.

● எம்.அசோக் ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி

? 2012ம் ஆண்டுக்குள் அனைத்துக் கிராமங்களுமே மின்வசதி பெற்று விடும் என்கிறாரே பி.எம். சயீத்?

! இந்தியா ஏற்கெனவே ஒளிர்கிறது என்று சொன்னவர்கள் வாயிலும், நம்பியவர்கள் மனத்திலும் மண்ணு!

● விமலா வரதராஜன்,
ஹைதராபாத் - 47

? இன்பம், துன்பம் - இடைவெளி எத்தனை தூரம்?

! இரண்டும் ஒரே வட்டத்தின் இரு துருவ முனைகள். வட்டத்தின் விட்டம் நமது மனத்தின் தெளிவைப் பொறுத்தது.

● எஸ்.அசாதி,
பெருமாள்தேவன்பட்டி

? புதிய பயிற்சியாளர் கிரெக் சாப்பல் பற்றி...?

! அவர் அணிந்திருந்த புத்தம் புதிய பட்டு அங்கவஸ்திரம் எடுப்பாய் இருந்தது. அதேபோல் புதிய உத்திகளைக் கையாண்டு ஆட்டத்தையும் மிளிரச் செய்ய வேண்டும். 'சச்சின் முன்போல் இனி சோபிக்கமாட்டார்' என்ற அறிக்கை முதல் கோணல். முற்றிலும் கோணலாகி விடாமல் கவனமாகச் செயல்படட்டும்.

● ஹெச்.ஆண்டனி தமிழரசன்,
மும்பை - 17

? பெப்ஸி, கோக், ஃபான்டாவை இனி ரயில்களில் விற்கத் தடை விதித்து விட்டாரே லல்லு...? அதிரடி அல்லவா?

! இத்தகைய பானங்கள் உடலுக்கு ஓரளவு தீங்கு விளைவிப்பவை என்பது உண்மை. ஆனால் லல்லுவின் முயற்சி சட்ட ரீதியாகச் செல்லுபடியாகாது. அவருக்கு வேறு ஏதேனும் உள் நோக்கம் இருக்குமோ என்னமோ, நமக்குத் தெரியாது சாமி!



❑ ரூ.100/- பரிசு பெறுபவர்:
ஆர்.கே.லிங்கேசன்,
மேலகிருஷ்ணன்புதூர்,
குமரி - 629 601

✱ ரூ.50/- பரிசு பெறுபவர்:
வீரசெல்வம்,
பல்லவனம் பூம்புகார் அஞ்சல்,
சீர்காழி தாலுகா - 609 105

# வித்தியாசமான புத்தகம் !




## "இம்மண்ணில் மறைக்கப்பட்ட ஓர் மாபெரும் பொக்கிஷம்"

# பிறந்த ஜாதகத்தையே சரி செய்யும் கலை

- நம்முடைய ஜாதகம் யோகமாக இல்லையே என்பவர்கள் இந்த பொக்கிஷத்தினை ஒருமுறை படியுங்கள். நீங்கள் அசந்து போவீர்கள்! இந்த நூலை படித்து முடித்ததும் உங்கள் வாழ்க்கையைப்பற்றி இதுவரை நீங்கள் நினைத்துக்கொண்டிருந்த எண்ணத்தை மாற்றிக்கொள்வீர்கள்.
- இது நடைமுறை சாத்தியமா என்பவர்களுக்காக இந்த கலையை பயன்படுத்தி பலன்பெற்றவர்களின் அனுபவத்தை இந்நூலில் இணைத்துள்ளோம்.
- பல்லாயிரக்கணக்கானவர்களின் வாழ்க்கையை மாற்றியமைத்த ஒரு உன்னத கலை. இந்த நூலை படிக்க வாய்ப்பு கிடைத்தால் அது நீங்கள் செய்த பூர்வ புண்ணியம்.

**தபாலில் பெற ரூ.65/- M.O.செய்யவும்**

**VPPயில் பெற புத்தகம் + VPP கட்டணம் சேர்த்து ரூ.100/-**

# A.E.RAAJAMANICKAM

BBM., DMM., DHA.,

**ASTROLOGY & NUMEROLOGY**

**138, RANA NAGAR, BHAVANI(Post), ERODE - 638 301.**

**PH : 04256 - 230901, Cell : 98427 - 73737, 98652 - 94721**

E-mail : astrobhavani@yahoo.com    Website :www.oshaani.com

"பிறந்த ஜாதகத்தையே சரிசெய்யும் கலை" – இந்நிகழ்ச்சி பற்றி விஜய் TV -யில் ஒவ்வொரு வாரமும் செவ்வாய்க்கிழமை இரவு 11.30 மணிக்கு காணுங்கள்.

# 3 பர்சனல் டைரி

சிக்னல்களில் காத்திருக்க நேரும் நிமிடங்கள் குறித்து நான் ஒரு போதும் கலவரப்படுவதில்லை. மாநகர வாழ்வின் சகல நெருக்கடிகளையும் ஏற்றுக் கொண்டு, காலில் சக்கரம் கட்டிய ரோபோக்களைப் போல ஓடிக்கொண்டிருக்கும் விதவிதமான மனிதர்கள். அவர்களைச் சில கணங்களேனும் தடுத்து நிறுத்திவிடும் டிராஃபிக் சிக்னல்கள், என்னைப் போன்று புகழ் வெளிச்சத்தில் சிக்கி, சுதந்திரமாய் வெளியே நடமாட முடியாத நடிகனுக்கு, புதிய தரிசனங்களைக் காட்டும் திறந்த வெளிச் சாளரங்கள்.

ஜூன் முதல் வாரத்தின் பரபரப்பான பள்ளி நேரத்துக் காலை. தி.நகரின் முக்கிய சாலை சந்திப்பில் சிக்னலுக்காகக் காத்திருந்தேன். எனது காரின் அருகில் வந்து நின்ற மோட்டார் சைக்கிளில் ஓர் இளம் தந்தை. பின் சீட்டில் அமர்ந்தபடி அவரைப் பற்றிக் கொண்டிருந்த யூனிஃபார்ம் சிறுவனின் கண்களிலிருந்து தாரை தாரையாய் கண்ணீர். மூக்கிலிருந்து தண்ணீர். காருக்குள் ஒலித்துக் கொண்டிருந்த எஃப்.எம் ரேடியோவை நிறுத்தி விட்டு கவனித்தேன்.

"டேய்... அழுறதை நிறுத்து..."

"முடியாது போ!"

"நாலு நாள் ஒழுங்காகத்தானேடா போனே! இப்போ எதுக்கு அடம்?"

"நான் இந்த ஸ்கூலுக்குப் போக மாட்டேன்."

"ஏண்டா?"

"பிடிக்கல டாடி! வேற ஸ்கூல்ல சேர்த்து விடுங்க."

அவனது உறுதியைப் பார்த்து அப்பா திகைத்துக் கொண்டிருக்கும் போதே சிக்னல் விழுந்தது. வாகன இரைச்சலில் கரைந்துபோன அவனது அழுகை, என்னை எனது பள்ளி நாட்களுக்கு கூட்டிக்கொண்டு போனது.

இரண்டாம் வகுப்பு வரை ஒரு பள்ளி. மூன்றாம் வகுப்பைத் தொடர வேறொரு பள்ளியில் சேர்த்து விட்டார்கள். தம்பிக்கும் அதே பள்ளியில் அட்மிஷன். புதிய பள்ளிக்குப் போகப் போகிறோம் என்ற குறுகுறுப்பு. தம்பியுடன் சந்தோஷமாகக் கிளம்பினேன். காலை அணிவகுப்பு, இசையுடன் கடவுள் வாழ்த்து என எல்லாம் பிரம்மாண்டமாக இருந்தன. வரிசை கலையாத எறும்புகளைப் போல் வகுப்புகளுக்குப் போவதே தனி அழகு. புதிய வகுப்பறை, தலைக்கு மேல் மின்விசிறி. மிஸ் அழகாக இருந்தார். அவரது கண்களில் அக்கா (அத்தை மகள்) சின்ன லட்சுமியின் கனிவு ஒளிர்ந்து கொண்டிருந்தது.

ஆனால் முதல்நாள், முதல் பாட வேளையே என்னை அதிர்ச்சியில் உறைய வைத்துவிட்டது. மிஸ் நிறைய பொது அறிவுக் கேள்விகளைக் கேட்டுக் கொண்டே இருந்தார். வகுப்பு நிறைய பிராமணப் பிள்ளைகள். ஒவ்வொரு கேள்விக்கும் டக்டக்கென்று எழுந்து நின்று பதில் சொன்னார்கள். எனக்கோ மிஸ் கேட்ட கேள்விகளும் புரியவில்லை... இவர்கள் சொன்ன பதில்களும் புரியவில்லை. என்னைத் தவிர வகுப்பிலிருந்த



• கனம்... முதுகிலேயா...? மனதிலேயா...?

# யார் இந்த சூர்யா?

அத்தனை பேரிடமும் அபாரக் கூர்மை!

நன்றாகப் படிக்கும் மாணவர்களுக்கு 'ஏ' செக்‌ஷன். சுமாராகப் படிப்பவர்களுக்கு 'பி'. மிகச் சுமாராகப் படிப்பவர்களுக்கு 'சி' என்று தரம் பிரித்த போது, என்னை 'சி'யில் தள்ளிவிட்டார்கள். சம்மட்டியால் அடித்ததைப் போல அவமானமாக உணர்ந்தேன்.

நன்றாகப் படிக்கும் மாணவர்களோடு நட்பை வளர்த்துக்கொள்ள முடியவில்லையே என்ற ஏக்கம். 'ஏ' செக்‌ஷன் மாணவர்களின் கிண்டலுக்கும் கேலிக்கும் ஆளாகும்போதெல்லாம் நெஞ்சை அடைக்கிற துக்கம். எல்லாமும் சேர்ந்து கொண்டதில், எனக்குள் புள்ளி மாதிரியிருந்த தாழ்வு மனப்பான்மை பலூன் மாதிரி ஊத ஆரம்பித்தது.

பாடங்கள் மனத்தில் பதியாமல்

வழுக்கி விளையாடின. வகுப்பறையில் என்னைக் கேள்விகள் எதுவும் கேட்டு விடுவார்களோ என்ற பயத்தில் தலை குனிந்து தரையைப் பார்த்தபடி அமர்ந் திருப்பேன். ஹிந்தி வகுப்புகள் என்றால் திகில். வகுப்பில் ஒருவர் விடாமல் ஹிந்தி உரைநடையை ஒவ்வொருவரும் ஒரு பக்கம் வாசித்தே ஆக வேண்டும். முதல் வரிசையில் ஆரம்பித்து வாசிக்கத் தொடங்குவார்கள். நான் மூன்றாவது வரிசைக்கு நழுவிவிடுவேன். மூன்றாவது வரிசைக்கு புத்தகம் கைமாறும்போது, இரண்டாவது வரிசைக்கு ரகசியமாய் இடப்பெயர்ச்சி நடக்கும். இப்படி ஊசலாட வைத்த தாழ்வு மனப் பான்மை, தப்பித்து ஓடும் எஸ்கே பிஸத்தையும் எனக்குக் கற்றுக் கொடுத் தது.

தேர்வுகள் வந்துவிட்டால் தேகம் திக்குளிப்பது போல இருக் கும். மூளை மொத்தமும் முடமாகி, அங்கே காற்று நிரம்பி விட்டது போல கனக்கும். நம்மால் முடியவில்லையே என்ற ஆதங்கத்தில், பிளேடு, ரப்பர், உள்ளங்கை என்று சின்னச் சின்ன விஷ யங்களில் திருட்டுத்தனமாக எழுதிச் சென்று 'பிட்' அடித்துப் பழகினேன். பக்கத்து இருக்கை பையனைப் பார்த்து, படபடப்போடு காப்பியடிப்பதும் கைவசப்பட்டது.

மினிமம் பாஸ் மார்க்காவது வாங்கி விட வேண்டும் என்ற பதற்றத்தில் இது போல் நான் செய்த தந்திரங்கள் எதுவும் பலன் தரவில்லை. விளைவு! மாறி மாறி ஒவ்வொரு பாடமாக ஃபெயிலாகிக் கொண்டே வந்தேன். தேர்வுகள் முடிந்து ரேங்க் கார்டு தரும்பொழுது, புத்தகப் பைக்குள் திறமையாக அதைப் பதுக்கி விடுவேன். அம்மாவின் கையெழுத்து சுலபமாக இருக்கும் என்பதால், பலமுறை நானே போட்டுக் கொடுத்துவிட்டு, பயத்துடன் பல நாட்களைக் கடத்தியதுண்டு.

எனக்கு ஏன் படிப்பு வரவில்லை, என்னிடம் என்ன மைனஸ் என்று அந்தப் பள்ளியில் எந்த ஆசிரியரும் கண்டுபிடிக்கவில்லை. கவலைப்படவும் இல்லை. என்னைத் தண்ணீர் தெளித்து விட்டுவிட்டார்கள் என்று கூடச் சொல்லலாம். ஆனால் அப்படியே எனக்கு நேரெதிரான ஆள் எனது தம்பி. படிப்பிலும் துடிப்புமிக்கவன். நன்றாகப் படித்தால் வீட்டிலும், பள்ளியிலும் எப்படிக் கொண்டாடு வார்கள் என்பதற்கு, என் தம்பியே கண் முன்னால் ஒரு முன் மாதிரியாக ஜம்மென்று வலம் வந்து கொண்டி ருந்தான். படிப்பில் மட்டுமல்ல, பள்ளி நிகழ்ச்சிகளில் பங்கேற்பதில் அவன் காட்டுகிற ஆர்வம் எனக்கே ஆச்சர்ய மாக இருக்கும்.



* தம்பி நடிகன்...

ஒருமுறை பள்ளி ஆண்டு விழா நாடகத்தில் தம்பியும் நானும் நடித்தோம். தம்பி பலராமன், நான் சந்திரன். தம்பிக்குத்தான் பிரதான பாத்திரம். நிறைய வசனம் பேசி, அங்க அசைவு களை வெளிப்படுத்தி அவன் நடிக்க வேண்டும். நான் வெறும் சந்திரனாக ஒரே இடத்தில் நின்றுகொண்டு எல்லோரையும் ஆசீர்வதிக்க வேண்டும். அவ்வளவுதான் எனது வேலை. இந்த நாடகம்தான் என்றில்லை. வேறு எத்தனை பெரிய நாடகமென்றாலும் பொம்மை மாதிரி ஒரு 'செட்



• ...நான் 'செட்' ப்ராப்பர்ட்டி!

என்ற கலவர உணர்வு, கடிகார அலாரம் போல உள்ளுக்குள் அலறிக் கொண்டிருந்தது. ஷாப்பிங் போனால் பென்சில் சீவும் ஷார்ப்னர், திருவிழா என்றால் வளைந்து நெளியும் பொம்மை பாம்பு என்று திருடி வந்து தம்பியிடம் த்ரில்லாகக் காட்டுவேன். இதன் தொடர்ச்சியாகவே எல்லோரும் தூங்கிய பிறகு பேய் வேஷம் போட்டுக்கொண்டு போய் தம்பியை பயமுறுத்திய விளையாட்டுத் தனமும் நடந்தது.

ஆனால் அன்று பயமுறுத்திய என்னை விட்டுவிட்டு, பயந்து அலறிய தம்பியை அடித்து, அதட்டினார் அம்மா. எனக்கு ஆச்சர்யம்!

"ஏம்மா என்னை அடிக்கிறே?" -தம்பி கேட்டான்.

"நீ பயப்படுறதுனாலதானே அவன் பயமுறுத்துறான். நீ மொதல்ல பயப்படுறதை நிறுத்து'' என்றார் அம்மா. இடையில் குறுக்கிட்டு, "அவனுக்கும் ரெண்டு போடு" என்று அப்பா சொல்ல...

''மொத மொதல்ல அம்மான்னு கூப்பிட்டவன்... அவனை எப்படிங்க அடிக்கிறது?" என்று அம்மா சொன்னார். அந்தக் கணம் எனக்குள் ஒரு குட்டி நிருற்று பீரிட்டது. அந்த இரவில் அமைதியாக தூங்கிப் போனேன் என்றாலும், தம்பியோடு சண்டை போடும் சண்டியர்தனத்தை அவ்வளவு சீக்கிரம் விட்டுவிடவில்லை.

இத்தனைக்கும் அந்தச் சின்ன வயதில் தம்பியிடம் எனது விஷயங்களை பகிர்ந்து கொண்டது கிடையாது. அவனது தேவைகள் என்னவென்று கேட்டுத் தெரிந்து கொண்டதில்லை. அவனது துக்கங்களைப் பகிர்ந்து கொள்ளவில்லை. மனதளவில் எனக்கும் தம்பிக்கும் இடையில் எழுந்து நின்ற இந்தக் கண்ணாடிச் சுவரை உடைத்து நொறுக்குவதைப் போல, கணத்தில் நடந்து முடிந்து விட்ட அந்தச் சம்பவம் என்னை ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது!!!

ப்ராப்பர்ட்டி'யைப் போல என்னைப் பயன்படுத்திக் கொண்டார்கள்.

அன்று பலராமனாக தம்பிக்கு அலங்காரம் செய்ய ஆரம்பித்தவர்கள், நீண்ட நேரம் வரை என் பக்கம் திரும்பவேயில்லை. அவனது அணிகலன்களைச் சரிபார்ப்பதிலும், அவனுக்கு ஒப்பனை செய்வதிலும் ஆசிரியைகள் அதிக சடுபாடு காட்டிக் கொண்டிருந்தார்கள். அந்தக் கணத்தில் நம்மை யாரும் கவனிக்கவில்லையே என்ற கோபம் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தது. அவ்வளவுதான், அவன் கழுத்தில் அணிந்திருந்த ஆபரணங்களைப் பிடித்து ஒரே இழு! அத்தனையும் கையோடு கொத்தாக வந்துவிட்டது. பிறகு மேடையேற்றி விடும் வரை ஆசிரியைகள் என்னைத் திட்டித் தீர்த்துக் கொண்டிருந்தார்கள். எனக்கோ தம்பியிடம் 'உன்னைவிட நான் பெரியவன்' என்று காட்டிக்கொண்டே இருக்க வேண்டும்

(டைரியைத் தொடர்வேன்)

படம் : ஸ்ரீஹரி



* பழசு!

"உன் பார்வை பட்டாச்சில்ல, இனிமே வெளைய ஆரம்பிச்சுடும், வா"



* புதுசு!

"என்ன, இந்த அர்த்தராத்திரியில எங்கேயோ கௌம்பறாப்பல இருக்கு?''- பெருந்தேவியின் குரலில் கொஞ்சம் அதட்டல்.

# சிக்காமல் சிக்க வைப்பவர்!

"ஆமா, நம்மளையே குலதெய்வமா கொண்டாடற அந்தக் கொழந்த அழு துட்டே இருக்கானே, வயலும் விளையலே, பொண்ணுக்கு வரனும் அமையலேன்னு... உன் காதுல விழலியா...? போய் ஏதாச்சும் பண்ணிட்டு வரலாம்னுதான்..." - இவர் பதிலில் பரமதிதானம்.

"ஆனா அவ ஆம்படையான் ஓயாம ஸ்ரீநிவாசனைத்தானே பாடறான்? நம்மள எங்க நெனைக்கிறான். அவர் வந்து பாத்துக்கட்டும்னுதான் இருந்தேன்."

"அத்தனை மலையையும் தாண்டி அவர் லேசுல கௌம்பி வர்ற ஆனா என்ன?"

"சரி, நானும் வர்றேன், வாங்க."

காஞ்சி வரதராஜனும், தாயாரும் கிளம்பி அந்த ஏழை பிராமணனின் கிராமத்துக்கு வர...

"அடடா, என்ன அழகான கிராமம்! இங்கயே தங்கிடலாம்னு தோணறது. காய்ஞ்சு கெடக்கிற அந்த வயலெல்லாம் நல்லா வெளைஞ்சா, இன்னும் எத்தனை அழகா இருக்கும்!"

அந்த ஏழை வைணவனின் வீட்டின் வாசலுக்கு வந்தால்... ஏற்கெனவே ஒருவர் பட்டுப் பீதாம்பரமும், நகையும் அலங்கார முமாக நிற்கிறார். இவர்களை வரவேற்கவும் செய்கிறார்... திருமலை ஸ்ரீநிவாஸன்!

"அடடே, என்ன, தம்பதி சமேதரா இவ்ளோ தூரம்?"

"எல்லாம் நீங்க வந்திருக்கிற அதே வேலையாத்தான்."

"அதெல்லாம் முடியாது. நான்தான் மொதல்ல வந்தேன். நான்தான் பண்ணு வேன்."

"அதெப்படி? நாங்க ரெண்டு பேரா வந்துட்டோம். எனக்கு இந்த ஊர் ரொம்பப் பிடிச்சிருக்கு. கொஞ்ச நாள் இங்க இருக்க லாம்னு பாக்கறேன்" தாயார் கண்டிப்பாய்ச் சொல்ல...

"சரி, இப்படிச் சொன்னப்பறம் நான் என்ன சொல்றது. ஆனா நீங்க ரெண்டு

பேரும் என்ன பண்ணினாலும் என் பங்கும் இருக்கணும். சரியா?"

"சரி, போய் அவனண்ட விஷயத்தைச் சொல்விடலாம்."





• ஆஞ்சநேயர்

**வி**ழுப்புரத்திலிருந்து வடகிழக்காய் 7 கி.மீல் இருக்கிறது பெரும்பாக்கம். ஸ்ரீதேவி, பூதேவி சமேதராய் வேங்கடவரதன், மார்பில் நரசிம்மருடன் எழுந்தருள, தக்ஷிண அஹோபிலம் என்று இன்னொரு பேரும் உண்டு. பெருந்தேவித் தாயாருக்கு, தனிச்சன்னதி. கூடவே வந்து சேர்ந்து கொண்டார் கல்யாண ஆஞ்சநேயர். பங்குனி உத்திரத்தில் நடக்கும் கல்யாண உற்சவம் அத்தனை கோலாகலம்!

நானூறு வருஷத்து பழைய கோயில், போன ஆவணி மாதம் புதுக்கோலம் பெற்றது. புது வண்ணங்களும், அருமையான பராமரிப்பும் மின்ன, ஆவணியில் மாவட்ட கலெக்டர் தலைமையில் குடமுழுக்கு நடந்தது. வேங்கடவரதனும் தாயாரும் வேண்டியதை வாரி வாரி வழங்கு

• பெருந்தேவி, ஸ்ரீதேவி,
பூதேவி சமேத வேங்கடவரதன்



**வீ**ட்டுக்குள் துக்கத்தை தூக்கத்தில் மறந்து கொண்டிருந்த கணவன் - மனைவி இரண்டு பேருக்கும் ஒரே கனவு!

''கவலைப்படாதே கொழந்தே. நாங்க வந்துட்டோம். உன் நிலத்திலதான் போய் இருக்கப் போறோம். எங்களை வெளியில எடுத்து இங்கேயே கோயில் கட்டு. கூடவே இருந்து பாத்துக்கறோம்."

விடிந்ததும் நிலத்தில் போய்ப் பார்த்தால் உள்ளே விக்கிரகம்! வலது கரம் வரங்களை அள்ளித்தரும் வரத ஹஸ்தம். இடது கரம் காவல் நின்று அருகில் அழைத்து அணைத்து ஆறுதல் தரும் கடிக ஹஸ்தம். காஞ்சி வரதனும், திருமலை ஸ்ரீநிவாசனும் இணைந்த கோலம்! ஸ்ரீதேவி, பூதேவி, பெருந்தேவித் தாயார்.

ஊர் கூடி அனைவர் குறையும் தீர 1605ல் கோயில் எழுந்தது.

கிறார்கள். இந்தக் கல்யாண ஆஞ்சநேயரின் பெருமை மட்டும் கொஞ்சம் அலாதி. ஸம்சார பந்தத்தில் சிக்கிக் கொள்ளாத இவர், மற்றவர்களை சிக்க வைப்பதில் சமர்த்தர். ஆம், கல்யாணத் தடை, தோஷம் என்று தவிப்பவர்கள் இவரிடம் வந்து நேர்ந்து கொண்டால் போதும். அப்புறம் தடையாவது, தோஷமாவது. உடனடியாய் கல்யாணம் நடக்க அருள் செய்து விடுவார். வேங்கட வரதனையும் தாயாரையும் காண ஒரேமுறை வாருங்கள் போதும்! பிறகு நீங்களாகவே தொடர்ந்து வந்து கொண்டிருப்பீர்கள்.

**- விஷ்வக்**

கிரிக்கெட் பற்றி அறிந்தவர் யாரும் தமிழகத்தின் நம்பர் ஒன் ப்ளேயரான ஷரத்தை நினைத்து ஆதங்கப்படாமல் இருக்க முடியாது. சச்சின், ராகுல் ட்ராவிட் அளவுக்கு வளர்ந்திருக்க வேண்டியவர், பதினான்கு வருடங்களாக தமிழ்நாட்டுக் காகவே நெற்றி வியர்வை சிந்திக் கொண்டிருக்கிறார். மீடியாவும் இவரை அவ்வளவாகக் கண்டுகொள்ளாத நிலையில், தன் மனக்குமுறல்களை நம்மிடம் வெளிப்படுத்தினார்.

"நான் பன்னிரண்டாவது படிக்கும் போது தமிழ்நாடு டீம்ல தேர்வானேன். மும்பை மாதிரி தமிழ்நாடும் பேட்டிங்ல ரொம்ப வலுவானது. ஸ்ரீகாந்த், சந்திர சேகர், ராபின்சிங், W.V.ராமன் இருந்த டீம்ல நானும் தேர்வானது பெரிய விஷ யம்னு நினைக்கிறேன். ஆனா என் தொடக்கமே சொதப்பலா அமைஞ்சது. சேலத்துல ஆந்திராவோட ஆட வேண்டிய மேட்ச் மழையால பாழாய்ப் போனது. அடுத்ததா கோவால கூட நான் ரெண்டு ரன்தான்



# "சிதைந்துபோன கனவுகள்!"

அடிச்சேன். (சிரிக்கிறார்)

பட்ட காலிலேயே படும்ங்கிற மாதிரி 93ல நடந்த விபத்துல போலீஸ் ஜீப் மீது என் பைக் மோதி என் கால் உடைய, ஒரு வருஷம் படுத்த படுக்கையா கிடந் தேன். ஒரு கிரிக்கெட் ப்ளேயர், ஒரு வருஷம் வீட்ல சும்மா உட்கார்ந்திருக் கிறது சாதாரண விஷயமல்ல. இதுதான் என் வாழ்க்கையை திசை திருப்பிருச் சுன்னு நினைக்கிறேன். ஆனாலும் 95க்கு அப்புறம் நான் தொட்டதெல்லாம் பொன் னாச்சு. மளமளன்னு செஞ்சுரி நிறைய அடிக்க ஆரம்பிச்சேன்.

என்ன அடிச்சு என்ன பிரயோஜனம்? இந்திய அணியில இடம்பெற முடியலை. இதை நினைச்சா கஷ்டமாதான் இருக்கு. என்னால நல்லா ஆடத்தான் முடியும். நாலு பேர் சேர்ந்து இந்தியன் டீமைத் தேர்ந்தெடுக்கிற விஷயத்துல நான் எப்படித் தலையிட முடியும்? எல்லாம் பேட் லக்.

'சார்க்' கோப்பைக்காக இந்தியா 'A' டீம்ல நான் தேர்வாகி, மூணு மேட்சுல ரெண்டுல 'மேன் ஆஃப் த மேட்ச்' வாங்கினேன். ஆனா அடுத்த இந்தியா 'A' டூர்ல என்னை நீக்கிட்டாங்க. ஏன்னு தெரியலை. 97 ஏஷியா கப் இந்தியன் டீமுக்காக தேர்ந்தெடுக்கப்பட்ட இருபது பேரில் நானும் ஒருவன். இறுதியா தேர்வான 14 பேர்ல என் பேர் இல்லை. ஏன்? தெரியலை.

ஏழாயிரம் ஃபேர்ஸ்ட் க்ளாஸ் ரன்ஸ், 26 செஞ்சுரிகள் அடிச்சு இந்தியாவின் டாப் 10ல நான் இருக்கேன். என்ன பிரயோஜனம்? அப்போ தமிழ்நாடு கிரிக் கெட் அசோஸியேஷனும் என்னை ஏற்றி விட எந்த முயற்சியும் எடுக்கலை. இப்போ சீனிவாசன் டி.என்.சி.ஏ தலைவரா வந்த பிறகு நல்லா ஊக்கப்படுத்துறாங்க. ஆனா இது ரொம்ப லேட்டாச்சே. எனக்கு வய சாயிடுச்சு இல்

லையா?" விரக்தி ததும்பப் பேசுகிறார் ஷரத்.

"கிடைக்கும் சந்தர்ப்பங்களை தமிழ்நாட்டு வீரர்கள் சரியாகப் பயன்படுத்துறதில்லைன்னு, பலர் மேம்போக்கா குற்றம் சாட்டுறாங்க. அதெல்லாம் சும்மா. நான் பேர் சொல்ல விரும்பலை... மற்ற மாநில ப்ளேயர்ஸுக்கு நிறைய வாய்ப்பு கொடுக்கிறவங்க ஏன் தமிழ்நாடு ப்ளேயர்ஸை மட்டும் ஒருசில மேட்ச்சுகளை வைத்து கணக்கிடறாங்க? இந்த முறையில ஒரு வீரரை இந்திய டீமுக்குத் தேர்வு செஞ்சா அவங்க செலக்டர்களே அல்ல, ஜோக்கர்ஸ்! சச்சின் டெண்டுல்கர் 80 மேட்சுக்குப் பிறகுதான் தன் முதல் செஞ்சுரியைப் போட்டாரு. அதனால அவர் ஜீனியஸ் கிடையாதா? இந்தியாவின் சாபக்கேடே இதுதான். நீ லாயக்கில்லைன்னு உடனே முத்திரை குத்திடுவாங்க" என்றவரிடம்

'நேஷனல் டீமில் தேர்வாகாத நிலையில் தமிழ்நாட்டு வீரர்களால் தொடர்ந்து முனைப்புடன் விளையாட முடிகிறதா?' என்றோம்.

"பசங்க ரொம்ப பாதிப்பிலிருக்காங்க. நல்லா ஆடியும் எந்தப் பலனுமில்லாம விரக்தியில எத்தனை தமிழ்நாடு ப்ளேயர்ஸ் அழிஞ்சிருக்காங்க தெரியுமா? அவங்க கனவெல்லாம் சிதைஞ்சு போச்சு. நமக்கு எதிர்காலம் இல்லைன்னு தெரிஞ்ச பிறகு எப்படி தொடர்ந்து நல்லா ஆட முடியும்? இந்த விஷயத்துல நான் பாலாஜியைப் பாராட்டியே ஆகணும். தமிழ்நாட்டிலிருந்து கிளம்பி இந்தியன் டீம்ல அவரோட தேவையை ஏற்படுத்தியிருக்காரு"- மெல்ல சந்தோஷம் எட்டிப் பார்க்கிறது ஷரத்திடம்.

"ரஞ்சி டிராஃபியை தமிழ்நாட்டுக்கு பெற்றுத்தர முடியலையேங்கிறதை நினைச்சா ஜீரணிக்கவே முடியலை. தமிழ்நாட்டுக்காக இன்னும் என்னால ரெண்டு மூணு வருஷம் தான் ஆட முடியும். அதுக்குள்ளே நூறு ரஞ்சி மேட்ச் ஆடி தமிழ்நாட்டுக்கு ரஞ்சி டிராஃபியை வாங்கித் தரணும். இந்தியாவுக்காகத்தான் ஆட முடியலை. இதாவது செஞ்சு சந்தோஷமா கிரிக்கெட்டிலிருந்து விலகணும்.

அதே மாதிரி நான் பெருமைப்படற விஷயம், ராகுல் டிராவிட் தன்னோட சுயசரிதையில் 'ஷரத் இந்திய டீமில் இடம் பெறாதது மிகவும் துரதிர்ஷ்டமானது. தமிழ்நாடு கிரிக்கெட் அசோஸியேஷன் அவருக்கு பக்கபலமாக இருந்திருக்க வேண்டும்' என்று என்னைப் பற்றி குறிப்பிட்டதைத்தான். இதைவிட வாழ்க்கையில் வேறென்ன வேண்டும்! எப்பொழுதும் நான் இதைத்தான் நினைத்துக் கொள்வேன். I'm not the loser!" - ஷரத்தின் உடம்பு சிலிர்க்கிறது.

**ஷரத்**

- **ச.ந.கண்ணன்**

படங்கள் : **ராஜன்**



# நீ... நான்...

ரோஜா பழுத்தால் அந்தப் பழம் எவ்வாறு இருக்கும், சரக்கொன்றை, ஒவ்வொரு கொத்தும் ஒவ்வொரு வண்ண மாயிருந்தால் எப்படி இருக்கும், பாலத்து அரச மரத்து மோகினிப் பிசாசு வீடு வரைக்கும் உடன் வருவாளாமே, ஏன் ஒரு நாள் கூடப் பேசுவதில்லை போன்ற கேள்விகளால் நான் நிரம்பி இருந்த பருவம் அது. மதியம் உணவுக்கடுத்த வகுப்பு. பேராசிரியர் இன்னும் வந்து சேர வில்லை. எங்களுக்கடுத்த, இடைவெளி விட்டுப் போடப்பட்டிருந்த மேசை மேல் சாய்ந்து, கனகமணி தீவிர மாகப் படித்துக் கொண்டிருந்தாள். அப்படியான பாவனையை வெளிப்படுத்திக் கொண்டிருந்தாள். அந்த பாவனை, சண்முகத்துக்குக் கலக உணர்வைத் தோற்றிவிட்டது.

"கனகமணி, சைவ சித்தாந்தமா படிக்கிறாய்?" என்றான்.

தலையில் பல்லி விழுந்தாற் போலத் திடுக்கிட்டுத் தன் ஆடை யைச் சரி பண்ணிக்கொண்டு, புத்தகத்துக்குள் ஆழ்ந்தாள். அது அவளை மேலும் உசுப்பி விட் டது.

"சித்தாந்தம் படிக்கிற வயதா உனக்கு? எதை எதையோ படிக்கிறாய், என்னை ஏன் படிக்க மறுக்கிறாய்."

அவள் திரும்பி தன் மூன்றாம் விழியால் நோக்கினாள்.

"கலிங்கத்துப் பரணியை எடு, கண்ணே. அதில் கடை திறப்பு படி."

இந்த நாடகத்துக்குள் நான் எந்தப் பாத்திரமும் வகிக்கவில்லை. துரதிருஷ்ட வசமாக, நான் கலிங்கத்துப் பரணியில் பேய்கள் சமையல் செய்யும் பகுதியில் இருந்தேன். சடாரென என் புத்தகத்தைப் பிடுங்கி, அவள் முன் வைத்த சண்முகம், "சிதறிக்கிடக்கும் எழுத்துக்களைக் கூட்டி வெளியே எறியாதே. அவை எழுத்துக்கள் அல்ல, என் இதய நொறுங்கல்கள்" என்ற வன், அத்தோடு நிறுத்திக் கொண்டிருந்

பிரபஞ்சன்

தால் பரவாயில்லை. எதுகை மோனை ரசாயனத்தில் கிளறப்பட்டு, "என் ரத்தினமே" என்றும் சேர்த்துக் கொண்டான். கனகமணி, அந்த என் புத்தகத்தை எடுத்துக் கொண்டு முதல்வர் அறைக்கு, ஏறக்குறைய ஓடினாள். அதில் முதல் பக்கத்தில் என் பெயர் இருந்தது.

கிஷ்டன் கடையில் தேனீர் அருந்திக் கொண்டிருந்தேன். திடுமென பூமி பிளந்து வந்தவள் போல என் முன் நின்றாள் வசந்தி. "எத்தனை நாள் சஸ்பெண்ட்?" என்றாள். "ஒரு வாரம் என்றேன்". அவள் சிரித்தாள். அந்த மாதிரி ஓட்டை உடைசல் டீக்கடையில் டீ குடிப்பாளா என்று எண்ணியபடி, "டீ சாப்பிடறீங்களா?" என்றேன். ஆச்சரியம். 'உம்' என்றாள். அவளுக்கு 'ஸ்பெஷல்' டீயாகப் போட்டுக் கொடுத்தான் கிஷ்டன். அது போல ரம்யமான டீயை அவன் கடையில் நான் சாப்பிட்டதில்லை.

யானைகட்டித் தெருவில் இருந்த அவள் விடுதிக்கு சேர்ந்து நடந்தோம். முதல் அனுபவம். என் கால்கள் தரையிலிருந்து ஒரு அடி உயர்ந்து நடந்தன.

"கனகமணி, இதை பிரின்ஸ்பல் வரைக்கும் கொண்டு சென்றிருக்க வேண்டியதில்லை. நான் அவளிடம் சொன்னேன். சம்பந்தமில்லாமல் நீங்கள் வேறு மாட்டிக் கொண்டீர்கள்."

போதும். அது போதுமானதாக இருந்தது...

வசந்தியின் நாள் அலுவல் எனக்கு அத்துபடி. ஐந்து மணிக்கு அலாரம்



இல்லாமல் எழல். ஆறு வரையும் அறைக்குள் பாட்டுப் பயிற்சி. ஆறு முதல் எட்டு வரைக்கும் மொட்டை மாடியில் நடந்து கொண்டு வாசித்தல். (சரியாக ஆறுக்கும் ஆறரைக்கும் இடையே நான் அந்தத் தெரு வழியாக ஆற்றுக்கு நடப்பேன்..) அப்புறம் குளியல், புறப்பாடு. ஒன்பது இருபதுக்கு ராமையர் கிளப்பைக் கடத்தல்... இத்யாதி. எனக்குப் பூரணி பிடித்திருந்தாள். அப்போது நான் அரவிந்தன். அப்புறம் யமுனா. நான்தான் பாபு. அவ்வப்போது கனவில் வந்து, படகோட்டிக் கொண்டே 'முல்லை மலர் மேலே' பாடும் பத்மினி. எல்லாரின் கூட்டுக் கலவையென வசந்தி. அப்போது, நினைவில் என் பிம்பம் ராஜேந்திரசோழன். அப்பா ராஜராஜனைப் பகைத்துக்கொண்டு தனியாக வேறு ஊரையே நிறுவி, தனியாகப் பெரிய கோயிலைத் தோற்கடிக்கும் கங்கை கொண்ட சோழீச்சுரம் கோயில் கட்டும் கோபக்கார இளவரசன். என் அப்பாவின் மேல் அந்தக் காலத்தில் எனக்கிருந்த கோபத்துக்கு இந்த பிம்பமும், அப்பா அறியாத என் பட்டமகிஷித் தேர்வும் எனக்கு எல்லை இல்லாத மகிழ்ச்சியைத் தந்தது.

ஆண் பெண் என்பதெல்லாம் வெறும் தோற்ற மாத்திரம்தான். இதை உணரும் ஞானமே, காதல். காதல், அவஸ்தை இல்லை. அவஸ்தையிலிருந்து விடுபடல் காதல். மனித வாழ்வின் தாத்பர்யம், சுதந்திரம் என்றால், காதல் சுதந்திரத்துக்கான பத்தாம்படி. மறைத்து வைக்கப்பட்ட ரகசியச் சிறகுகளை மனிதர்களுக்கு வழங்குகிறது காதல்.

**கோ**டை விடுமுறைக்குப் பிறகு கல்லூரி தொடங்கியது. அடுத்த வாரம் தான் வசந்தி கல்லூரி திரும்பினாள். அவள் மிகவும் மாறுபட்டிருந்தாள். தோற்றம், முகம் எல்லாம். ஏதோ பெரிய அதிர்ஷ்டச் செய்தி இருக்க வேண்டும் என்று நான் அவதானித்தேன். விடுமுறையில் அவள் எழுதிய சில கடிதங்களில், இதற்கான முன் உரைகள் இருப்பதாக நான் உணர்ந்தேன். ஒரு மாலை, அவள் சொன்னாள். கிருஷ்ணமூர்த்தி என்னும் சிநேகிதன் அவளுக்கு இருப்பதாகவும், அவனை அவள் விரும்புகிறாள் என்றும். அவர்கள் உறவு, அவர்கள் வீட்டுக்கு உடன்பாடு இல்லை என்றும் பலப்பல விஷயங்கள்.

அவள், தின்பதற்கு முடியாத வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருந்தாள். அச்சொற்களை என் காதுகளில் சேர்க்காது, எங்கிருந்தோ வந்த கடுங்காற்று, அவற்றைச் சருகைக் கற்களாகப் பாதை ஓரத்தில் விசிறிப் போட்டது. உலகம் நின்று போய்விட்டது. இது தவறு. உலகம் யாருக்காகவும் நின்று போவதில்லை. அன்று இரவு மட்டும், நிதானமாக நகர்ந்ததாக எனக்குத் தோன்றியது. இரவுகளுக்கு உரிய சத்தத்தையும், வாசனையையும் அன்றுதான் நான் பரிபூரணமாக உணர்ந்தேன். கருத்து, இருண்டிருந்த இரவு, கொஞ்சம் கொஞ்சமாக விடியத் தொடங்கியது. வெளிச்சம் வந்தது. எல்லா இரவுகளும் விடியத்தான் செய்கின்றன.

விடியும்போதே நான் தெளிவை அடைந்தேன்.

காதல், நட்பு, உறவு என்பது ஒற்றைப் பரிமாணம் உள்ள பொருள் அல்லவோ! அவளை நான் நேசிப்பதை ஏன் நிறுத்திக் கொள்ள வேண்டும். அடுத்த சில மாதங்களிலே கிருஷ்ணமூர்த்தியை எனக்கு அவள் அறிமுகம் செய்து வைத்தாள். எந்தச் சங்கடமும் எனக்கு இல்லை. மனப்பூர்வமாக அவரை நான் வரவேற்று வாழ்த்தினேன். மாலைகளில் சேர்ந்து

**'ராமனாதனின் சகானாவைக் கேட்க நேர்ந்தபோது, வசந்தியின் நினைவு என்னை அதிகம் கிளர்த்தியது.'**



நடந்தோம். ஊர் சுற்றினோம். பனி பெய்த இரவுகளில் நனைந்தோம். அவர் தங்கியிருந்த ஓட்டலுக்கு நான் போனேன். அவரும் என்னுடன் பல இரவுகள் தங்கினார். அவள் பல இரவுகளில் எங்களுக்குப் பாடினாள்.

அடுத்த ஒன்றிரண்டு மாதங்களில் வசந்தியின் அப்பா வந்திருந்தார். வசந்தி எட்டாம் மாதம் என்று சொல்லிக் கொண்டார்கள். "தவிர்க்க முடியலை. எல்லாம் அவசரம் அவசரமாக நடந்து விட்டது. எழுதுகிறேன்" என்று மட்டும், பெட்டி படுக்கையோடு பேருந்தில் ஏறும்போது வசந்தி சொன்னாள். அப்பா, யாருடனும் எதுவும் பேச முடியாத துயரத்தில் இருந்தது தெரிந்தது.

எனக்கு எதுவும் பிரச்னையாக இல்லை. வசந்தி படிப்பை முடிக்காமல் போகிறாளே என்பதுதான் என் கவலையாக இருந்தது. அதுவும் விரைவில் தீர்ந்து. படித்து, ஒரு தமிழாசிரியையாக, பட்டதாரியாக, விரிவுரையாளராக மகிழ்ச்சியாக வாழ்ந்து கொண்டிருந்தாள். அவள் பணியாற்றும் கல்லூரியின் தமிழ் மன்றத்துக்குப் பேச அழைத்தாள். சென்று வந்தேன்.

**வ**சந்தியின் வகுப்புகள், சுவைகள், பிடிக்கும் ராகங்கள், படிக்கும் எழுத்தாளர்கள், சங்க இலக்கியத்தில் அவள் புலமை, பிடித்த வர்ணங்கள் எல்லாம் எனக்குத் தெரியும். என்னைப் பற்றியும் அவள் அறிவாள். போன ஆண்டு, ஒரு மழை நாளின்போது, ராமநாதனின் சகானாவைக் கேட்க நேர்ந்தது. தவிர்க்க முடியாது, அவள் நினைவு அதிகம் என்னைக் கிளர்த்தியது. தொலைபேசியில் அவளை அழைத்தேன். "என்ன விஷயம்?" என்றாள். சொன்னேன். சற்று மவுனமாக இருந்துவிட்டுச் சொன்னாள். "நம்ப மாட்டே... இப்போ, அஞ்சு நிமிஷத்துக்கு முன்னால் உன்னை நினைச்சேன். நம்பி யகப் பொருளைப் படிக்க வேண்டி இருந்தது. புத்தகத்தை எடுத்து இப்போதான் தேவைப்பட்ட பகுதியை முடித்தேன். அது, நீ கொடுத்த புத்தகம்" என்றாள்.

மரம், காற்று, தெரு, வீடு, தென்றல், சென்னை வெயில் எல்லாம் எங்களுக்கு ஆதரவாகத்தான் இருக்கின்றன. ஒரு வருத்தம் -

எங்கள் அனுபவத்தை நான் மட்டும் தானே பேசிக் கொண்டிருக்கிறேன். ஏன் வசந்திகள் பேசுவதில்லை. யார் இன்னும் தடையாக இருப்பது? இன்னும் எத்தனை காலம்தான் நினைவுகள் ஆண்கள் மயமாக இருப்பது? சத்தியம். பெண்கள் பேசும்போதுதான் முழுமையடையும் என்று நான் நம்புகிறேன்.

சந்திப்பு : **மு.மாறன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

பளீர் இளமைத் தொடர்

# உள்ளம் துறந்தவன்

ஆபரேஷன் தொடங்க ராகவேந்தரைக் கொண்டுவர குறைந்தபட்சம் எட்டு மணி நேரமாகும் என்று மஞ்சரியை வீட்டுக்குப் போகச் சொன்னார்கள். மஞ்சரி "லவுஞ்சிலேயே காத்திருக்கிறேன்" என்று அடம் பிடித்தாள்.

"இப்ப வீட்டுக்குப் போறியா இல்லையா?" என்று நாகரத்தினம் அதட்டினார்.

டாக்டர் பாலாவைக் காணவில்லை. அறையில் உட்கார்ந்து கொண்டு, மரகதம் ஊரில் உள்ள தெய்வங்களுக்கெல்லாம் தன் தாலியைக் காப்பாற்ற வேண்டிக் கொண்டிருந்தாள். மஞ்சரி வரவேற்புப் பகுதிக்கு வந்து, தன்னை டெலிபோனில் அழைத்த டாக்டரை விசாரித்தாள்.

"டாக்டர் அருண்பிரகாஷ்னு..."

"அப்படி யாரும் இந்த ஆஸ்பத்திரியில இல்லையே..."

"எனக்கு போன் பண்ணி வரச்சொன்னாரே."

"கொஞ்சம் இருங்க. சூப்ரண்ட்டைக் கேக்கறேன்."

"ஓ எஸ். அவர் கவர்ன்மெண்ட் டாக்டர். நியூரோ சர்ஜன். மாற்று இதய ஆபரேஷன் நடக்கப் போவுதுங்க. அந்த பேஷண்ட் 'ப்ரெய்ன் டெட்'னு சர்ட்டிபிகேட் கொடுக்க வரைவழைச்சோம். பேஸ்மெண்ட்ல கான்ஃபரன்ஸ் ரூம்ல இருப்பார்."

படியிறங்கி அங்கே சென்றபோது, அரை இருளில் மூன்று டாக்டர்கள் கூடிப் பேசிக் கொண்டு, லாப் டாப்பில் ரிப்போர்ட் எழுதிக் கொண்டிருந்தார்கள்.

"என் பேர் மஞ்சரி டாக்டர்" என்றாள்.

அவர்கள் இந்தக் குறுக்கீட்டை ரசிக்கவில்லை.

"என்ன?"

"என்னை டாக்டர் அருண்பிரகாஷ் போன்ல கூப்பிட்டிருந்தார்."

"ஓ எஸ்! நோ ப்ராப்ளம். அந்தப் பையன்கிட்ட டோனர் கார்டு இருக்கு. 'ஹெல்ப் எ ஹார்ட்' நிறுவனத்திலிருந்து அனுப்பிச்சுட்டாங்க. அவனே கையெழுத்துப் போட்டுக் கொடுத்தது. விபத்தில் அடிபட்டு, கோமாவில ப்ரெய்ன் டெட்டா இருக்கானே!"

"பேரு?"

"அழகேசன். ரொம்பப் பெரிய காரியம் செய்திருக்கார். இந்த சின்ன வயசில பொறுப்பா தன் அத்தனை அங்கங்களையும் தானம்... மஞ்சரி ஆர் யு ஆல் ரைட்!"

கண்கள் இருண்டு அப்படியே அந்த நீண்ட மேஜை மேல் சாய்ந்தாள். "க்விக், டேக் ஹர் டு எமர்ஜென்ஸி."

நினைவு திரும்பியபோது இரவா, பகலா தெரியவில்லை. அழகேசனுடன் பேசிய பேச்செல்லாம் தாறுமாறாக தொகுப்பாக மனதில் ஓடியது. நாக்கு வறண்டிருந்தது. நர்ஸின் முகம் கிட்டே தெரிந்தது.

"டாக்டர் இப்ப நினைவு வருது. ஒண்ணும் இல்ல. சரியாய்டுச்சு.

மத்தியானம் சரியா சாப்பிட்டீங்களாம்மா?''

''என்ன ஆச்சு கண்ணு?'' என்று கல்யாணியின் குரல் கேட்டது.

டாக்டர் பிரகாஷ் வந்து அவள் மணிக்கட்டைத் தொட்டுப் பார்த்து, சார்ட்டைப் பார்த்து ''யூ ஆர் ஆல்ரைட்'' என்றார்.

''நான் அழகியைப் பார்க்கணும்.''

''ஹி இஸ் இன் கோமா. ஹி இஸ் இன் ப்ரிஆப்.''

''பார்க்கணும்... பார்க்கணும்.''

''பார்க்கலாம்.''

''என்ன ஆச்சு?''

''மஞ்சு, எப்படி இருக்கீங்க?''

''பரமேஸ்வரன் மாமா... அழகிக்கு என்ன ஆச்சு?''

''ரோடை க்ராஸ் பண்றப்ப லாரியோ, காரோ அடிச்சுட்டுது. சரியான ஹெட் இன்ஜுரி. ஹிட் அண்ட் ரன். நல்லவேளை டோனர் கார்டு பர்ஸிலேயே வச்சிருந்தான். அவங்கம்மாவும் வந்திருக்காங்க.''

''ஒரு வீல் சேர் கொண்டு வாங்க.''

ஐ.ஸி.யுவில் அந்தத் திரையை நீக்க...

''வா புள்ள! வந்து எம் மவனைப் பாரு. டாக்டருங்க சொல்றது எதுவும் புரியலை. தூங்கறா மாதிரிதான் இருக்கான். ஏம்மா எந்திரிச்சுருவானா? இல்லைன்னா டாக்டருங்களை கேட்டுச் சொல்லுங்க. நீ வந்திருக்கன்னு தெரிஞ்சா நிச்சயம் எந்திரிச்சுருவான்தானே? முகத்தில் கப்பு மாதிரி ஏதோ வச்சிருக்காங்க. மூடின கண்ணு தொறக்கலை... என்ன நடக்குது... சொல்லு கண்ணு. பாத்து சொல்லேன்.''

திரையை விலக்கியதில் ஆஸ்பத்திரி கவுனில் அடையாளம் இழந்து, வெண்டிலேட்டரால் பாதி முகம் மூடப்பட்டு கண்மூடிப் படுத்திருந்தான் அழகேன். எந்தவித காயமும் தெரியவில்லை. அடர்த்தியான தலைமயிர்க் கற்றையில் மட்டும் ஒரு இடத்தில் ரத்தம் ஒட்டிக் கொண்டிருப்பதை பரிவுடன் துடைத்துக் கொண்டிருந்தார்கள். மானிட்டர், இதயம் சீராக இயங்குவதை உறுத்தாமல் அறிவித்துக் கொண்டிருந்தது. மஞ்சரி உதட்டைப் பொத்திக் கொண்டு குமுறலை அடக்கிக் கொண்டாள். கண்ணீர் மார்புச் சட்டையை நனைத்து அதையும் மீறி படுக்கையில் விழுந்தது.

''மஞ்சரி உங்க நம்பரைத்தான் டோனர் கார்டில் கொடுத்திருந்தார்...''

''தெரியும்'' என்றாள்.

''மண்டையில் பலத்த உள் காயம்... ரத்தக் கசிவில் இர்ரிவர்ஸிபிள் டாமேஜ்...''

''வெண்டிலேட்டர்ல?''

''இறந்துட்டாரு... உயிரோட இருக்காரு.''

''வெண்டிலேட்டரை எடுத்துட்டா உடனே இறந்துடுவார்.''

நானொரு
பர்ஃப்யூம் பிரியை.
எங்க கிடைச்சாலும்
வாங்கிடுவேன். என் வீட்ல
பர்ஃப்யூம் கடையே
இருக்குன்னா
பார்த்துக்கோங்க.

''நினைவு திரும்பாதா?''

''ஸாரி!''

''என்னம்மா பேசிக்கிறீங்க?''

மீனாட்சியை காரிடரில் நாற்காலியில் உட்கார வைத்தான். கான்டீனிலிருந்து சூடான காபி கொண்டு வந்து கொடுத்தாள்.

''அம்மா! அழகேசனை மூச்சு மட்டும் விடற மெஷினா மாசக்கணக்கில் வச்சிருக்கலாம்.''

''நினைவு வந்துருமில்ல?''

''வராதாம்.''

''எல்லாக் கடவுளுக்கும் வேண்டிக்கிட்டிருக்கேன். வரும் புள்ள. எப்பவும் ரோடைக் கடக்கறப்பகூட புஸ்தகம் வாசிச்சுக்கிட்டே கடப்பான். கவனமே கிடையாது. நல்லவேளை! தகுந்த சமயத்தில் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்துட்டாங்க. நீயும் வந்துட்டே. எனக்குக் கவலை இல்லை. நல்ல மனசும்மா. மறதி! அவ்வளவுதான். அவனுக்கு சட்டைக்கு பட்டன் போட்டு தலைசீவி அனுப்பினேன்.''

''அம்மா, அழகி பிழைக்க மாட்டாரும்மா!''

''ஏன் புள்ள அப்படிச் சொல்லுதே?''

''மண்டைல சரியான அடி. மயக்கத்தி

விருந்து திரும்ப வரமுடியாதபடி அடி பட்டுருச்சும்மா. மூணு டாக்டர்ங்க பரிசோதிச்சு சொல்லிட்டாங்க..."

இரண்டு பெண்களும் துக்கப் பிணைப்பால் ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதனர்.

"அம்மா! இதில வினோதமா ஒண்ணு பாருங்க... அழகி தன் இதயத்தை கழட்டிக் கொடுத்துட்டுத்தான் உயிரை விடப் போறார். அதுவும் எங்கப்பாவுக்கு...



• பல்லவி மேனன்

ரெண்டு கிட்னி, லிவர்... கண்ணுன்னு... குறைந்தபட்சம் அஞ்சு பேருக்காவது உயிர் கொடுத்துட்டுத்தான் தன் உயிரை விடப் போறார்."

நினைவின் விளிம்பில் அது கேட்டது. நாகரத்தினம் ஆறுதல் சொன்னார்.

"அம்மா! உங்க மகன் மாதிரி மனுஷங்களைப் பார்க்கறது ரொம்ப ரொம்ப அரிதுங்க. செத்தும் கொடுத்தான் சீதக்காதின்னு..."

"ஆம்புலன்ஸில கொண்டு வரப்பவே நினைவு தப்பிருச்சு... டாக்டர்ங்ககிட்ட சொன்னோம். என்ன செலவானாலும் சரி, என்ன தேசத்திலிருந்து என்ன மருந்து வேணும்னாலும் சரி... அவனை ரிவைவ் பண்ண அவங்களும் முயற்சி பண்ணிப் பாத்தாங்க..."

"ஏதாவது பேசினானா அய்யா?"

"இல்லைங்க."

"அந்த விபத்து பத்தி ஏதாவது தெரியுமா? யார் அடிச்சாங்க?"

"ஆர்.ஏ.புரம் போலீஸ் ஸ்டேஷன்ல எஃப்.ஐ.ஆர். பதிஞ்சிருக்கோம். நான்கூட டெபுடி கமிஷனர்கிட்ட பேசிட்டேன், இடிச்சுட்டு போனானே மகாபாவி, அவனை ஒரு வாரத்துக்குள்ள கண்டுபிடிக்கிறதா சொல்லியிருக்காரு... கண்டு பிடிச்சு என்ன பயன்? துடியான பையனுங்க. எங்க வீட்ல மாப்பிள்ளையா வரவேண்டியவன்... மஞ்சரிக்கு தான் அதிர்ஷ்டமில்லை."

"உங்களுக்கு வேற யாரும் இருக்காங்களா?"

"ஒரே பையங்க!"

"கம்பெனில சொல்லி உங்களுக்கு ஒரு நல்ல தொகை ஏற்பாடு செய்யறோம். ஐயா! இந்தம்மா அட்ரஸ் வாங்கிக்கங்க... பெரிசா ஏதாவது செய்தே ஆகணும்..."

அந்த அறையில் அழகேசனின் உடலும் ராகவேந்தர் உடலும் அருகருகே காத்திருக்க, சுற்றிலும் கண்கள் மட்டும் தெரியுமாறு தலைக்குல்லாய், முக மறைப்பு, கையுறை என்று அசெப்டிக் சூழ்நிலையில் இரண்டு டாக்டர் குழுவினர், உதவி டாக்டர்கள், நர்ஸ்...

இந்த சரித்திர சம்பவத்தை வீடியோ பதிவு செய்ய, ஒரு டாக்டர் தோளில் கேமரா வைத்திருந்தார். அவரும், வெளியே மானிட்டரில் அறுவை சிகிச்சை முதுகலை மாணவர்கள் ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருக்க... ஒருவர் ரன்னிங் கமெண்ட்டரி போல சொல்லிக் கொண்டே வந்தார். 'அனீஸ்தட்டிஸ்ட் ஹார்ட் லங் மெஷின்களை இயக்குபவர்கள், இணைப்பவர்கள். எது மனித யத்னம், எது இயந்திர சாகசம் என்று இரண்டறக் கலந்து ஒரு...'

டாக்டர் பாலாவின் மூக்குக் கண்ணாடியில் ஸ்கால்பெல் அந்த முதல் கத்தி பளபளத்தது. மெல்ல இரண்டு இதயங்களும் நெடுக்குவாட்டாகப் பிரிக்கப்பட்டு, சட்டென்று ரத்தப்பெருக்கு கட்டுப்படுத்தப்பட்டு, மார்புக்கூடு பிரிக்கப்பட்டது.

(தொடரும்)

# "இழப்புகள் வலி தருபவை!"

***எழுத்தாளர்களின் கதையை தமிழ் சினிமாவில் பயன் படுத்தத் தயங்குவார்களே... சுபாவின் கதையை படமாக்க முனைந்தது எந்த தைரியத்தில்?***

"முப்பது, நாற்பது வருடங்களுக்கு முன்பு ஏ.வி.எம், வாஹினி படக் கம்பெனிகளில் 'கதை இலாகா' என்றொரு பிரிவு இருக்கும். நாளடைவில் இயக்குனர்களே கதை, திரைக்கதை, வசனம் எழுதி கதாசிரியரை டம்மியாக்கி விட்டார்கள். கதை அவருடையதாக இருக்கும். ஆனால், இயக்குனர் அதற்கான பெயரைத் தட்டிச் சென்று விடுவார். ஒரு படம் வேறு மொழிகளில் ரீமேக் செய்யப்படும்பொழுது 40% ராயல்டி கதாசிரியருக்குக் கொடுக்க வேண்டுமென்பதை யாரும் பின் பற்றுவதில்லை. இந்தியில் கதாசிரியருக்கு 25 லட்சம் சம்பளம் தரப்படுவது போலொரு நிலைமை இங்கு இல்லை. கேமரா, இசையெல்லாம்விட, படத்துக்குக் கதை முக்கியம் என்பதை உணர்ந்தவன் நான். நான் இயக்கும் அடுத்த படத்திலும் ஒரு எழுத்தாளரின் கதையையே படமாக எடுப்பேன்."



***ப்ருத்விராஜ் ஏற்றிருக்கும் வில்லன் கதாபாத்திரம் தமிழுக்கு ரொம்பவே புதுசு. எப்படி செதுக்கினீர்கள்?***

"எழுத்தாளர்கள் சுபா கல்கியில் நிருபர்களாக இருந்தபொழுதே எனக்கு பழக்கம். ஒருமுறை நாங்கள் மாயாஜாலில் படம் பார்த்துவிட்டு வரும்போது, அந்தப் படத்தில் நடிகர் பசுபதி அரிவாளை கையிலெடுத்துச் செய்யும் வில்லத்தனங்களைப் பற்றி விவாதித்து வந்தோம். தொடர்ந்து அடுத்தடுத்த படங்களிலும் பசுபதி அரிவாளை தூக்கிய படியே வில்லத்தனம் செய்ய, 'இதுமாதிரி எங்கும் பார்த்ததில்லையே. இதற்கு பதில் அரவிந்த்சாமி வில்லனாக வேஷம் கட்டினால் எப்படியிருக்கும்?' என்று யோசித்ததில் பிறந்ததுதான் 'கனா கண்டேன்' மற்றும் ப்ரித்விராஜ் கேரக்டர். அரவிந்த்சாமியையே நடிக்க வைக்க முயன்றோம். முழுவதுமாக பிஸினஸில் இறங்கி விட்ட அவர் மறுத்து விட்டார்."

***கதாபாத்திரங்களுக்கு ஏற்ற நடிகர்களை தேர்வு செய்தது எப்படி?***

"ஒரு பி.எச்டி படித்த மாணவர் வேஷத்துக்கு ஸ்ரீகாந்தைவிட தமிழ் சினிமாவில் வேறு யார் பொருத்தமாக இருப்பார்களென்று தெரியவில்லை. கோபிகா கேரக்டருக்கு சில இளம் நடிகைகளை அணுகியபோது, ஹீரோயினுக்கு மூன்றாவது ரீலிலேயே திருமணம் ஆவதை அவர்கள் விரும்பவில்லை. 'நான் தமிழ் சினிமாவில் ஐந்த வருஷத்துக்கு டீனேஜ் கேர்ளாகத்தான் நடிப்பேன்' என்றார் ஒரு நடிகை. தமிழ் சினிமாவில்

சந்தோஷத்திலிருக்கிறார் கே.வி. ஆனந்த். 'கனா கண்டேன்' ரிசல்ட் தமிழகமெங்கிலுமிருந்து பாசிட்டிவ்வாக வந்து கொண்டிருக்க, ஒரு இயக்குநராக தம்மை நிரூபித்து விட்டதில் அவர் முகத்தில் பூரிப்பு. அந்த சந்தோஷத்துடனேயே நம்மிடம் பேச ஆரம்பித்தார்...



# கே.வி.ஆனந்த்

அடுத்த வருடம் நீடிப்பதே சாத்தியமில்லாத விஷயம் என்பது அவர்களுக்குப் புரிவதில்லை. வில்லன் கேரக்டருக்கு சில இளம் கதாநாயகர்களைக் கேட்டபோது பயந்தார்கள். ஆஸ்திரேலியாவில் படித்து ஸ்டைலாக இங்கிலீஷ் பேசும் மலையாள நடிகர் ப்ருத்விராஜ் இறுதியில் கரெக்டாகப் பொருந்தினார். ஒவ்வொரு ஷாட்டின் பொழுதும் 'நீ கெட்டவன் இல்லை. அரவிந்த்சாமி' என்று அவர் காதில் ஓதிக்கொண்டேயிருந்தேன்."

***கடல் குடிநீர், கந்துவட்டி பிரச்னை கொண்ட படத்தில் கமர்ஷியல் விஷயங்கள் தேவைதானா?***

"கந்து வட்டியால் தயாரிப்பாளர்கள் எல்லாம் செத்துக் கொண்டிருக்கிறார்கள். காய்கறி மார்க்கெட்டில் கூட 20% வட்டிக்குக் கடன் கொடுக்கிறார்கள். கந்து வட்டியும், கடல் நீரை குடிநீராக்கும் திட்டமும் என்னுள் உண்டான பாதிப்புகள்.

2003ம் வருடம் நோபல் பரிசு பெற்ற கெமிஸ்ட்ரி தியரியைத்தான் ஸ்ரீகாந்த் படத்தில் உபயோகிப்பார். அப்படியே நேரடியாகச் சொன்னால் படம் டாகுமெண்ட்ரியாகி விடும். 'காதலை'யும் 'திருப்பாச்சி'யையும் ரசிக்கும் இடைப்பட்ட அடல்ட் ஆடியன்ஸை மனத்தில்

நினைத்துதான் படம் எடுத்தேன். சென்சாரில் 'ஏ' சர்டிபிகேட் கொடுத்திருந்தாலும் கவலைப்பட்டிருக்க மாட்டேன். நானே எதிர்பாராத விதமாக படம் பெண்களுக்கு அதிகம் பிடித்திருக்கிறது. பெண் நிருபர்கள் எழுதிய விமர்சனங்களில் யாரும் விவேக் காமெடியை ஆபாசம் என்று எழுதவில்லை. ஒரு சில பத்திரிகைகள்தான் விமர்சித்திருக்கின்றன"

***படத்துக்குக் கிடைத்திருக்கும் விமர்சனங்களை எப்படி எடுத்துக் கொள்கிறீர்கள்?***

இதுவரை ஒருவர்கூட படம் சுமார் என்று கூறவேயில்லை. ஆனால் எல்லோரும் படத்தைப் பாராட்டிவிட்டு அதன் பிறகு கமா போட்டுக் கூறும் குறைகள் தான் குழப்புகின்றன. 'கனா கண்டேன்' என் கனவுப் படமல்ல. பொல்யூட்டட் சினிமாதான். பாடல்கள் இல்லாமல் படமெடுக்க எனக்கும் ஆசைதான். 'ஆட்டோகிராப்', 'காதல்' போன்ற உலக சினிமாவுக்கு சிறிதும் குறையில்லாத படங்களை ஓட வைக்கும் மக்கள், இடையில் வெட்டு, குத்து படங்களையும் ஆதரித்து குழப்பி விடுகிறார்கள். படம் பிடிக்கவில்லையா? தியேட்டர் மீது சாணி அடியுங்கள். ரசனை உயர்ந்தாலொழிய நல்ல படங்கள் கிடைப்பது அரிதாகத் தானிருக்கும்."

***டைரக்ஷனை கையில் எடுத்ததால் ஏற்பட்ட இழப்புகள்?***

"சந்திரமுகி, அந்நியன், சச்சின், கஜினி, ஸ்வதேஷ் (ஹிந்தி) போன்ற படங்களை இந்த இடைப்பட்ட காலத்தில் இழக்க நேர்ந்ததுகூட முக்கியமல்ல. அதில் கிடைக்கும் சம்பளத்திலிருந்து பத்து சதவிகிதமே எனக்கு கனா கண்டேனில் கிடைத்தது. பண இழப்பு, வேலைப் பளு எல்லாம் வலி தருபவை என்றாலும், இப்பொழுது என்னால் இண்டஸ்ட்ரியில் தலை நிமிர்ந்து நடக்க முடியும் என்று நினைக்கிறேன்."

***திறமையான கேமராமேன்களெல்லாம் ஹிந்தி பக்கம் சென்றுவிடுகிறீர்களே?***

"தமிழில் கொடுப்பதைவிட பத்து மடங்கு சம்பளம் அதிகமாகத் தருகிறார்கள். நம் திறமை, தொழில் பக்தி பிடித்திருக்கிறது அவர்களுக்கு.

ஆனால் ஒன்றை நான் குறிப்பிட்டே ஆக வேண்டும். தமிழ்நாட்டிலுள்ள பத்திரிகைகளும் டி.வி மீடியாக்களும் ஒரு டெக்னீஷியனை மதித்து அவர்களைப் பற்றிய பேட்டிகளையும் தகவல்களையும் வெளியிடுவது போல், ஹிந்தி பத்திரிகைகள் செய்வதில்லை. ஒரு கேமராமேனுக்கும் நடிகைக்குமான உறவு குறித்த கிசுகிசுக்களைத்தான் அவர்கள் வெளியிடுகிறார்கள். மற்றபடி ஒரு கே.வி.ஆனந்தையோ அல்லது தோட்டாதரணியையோ தமிழ் மக்களுக்கு தெரிகிறதென்றால், அதற்குக் காரணம் எங்களுடைய திறமை மட்டுமல்ல... தமிழ்நாட்டு மீடியாக்களும் தான்."

- ச.ந. கண்ணன்
படங்கள்: ஸ்ரீஹரி



# PRASHANTI
## (HOUSE OF SILK COTTONS)



## மாமியார் மெச்சிய மருமகள்!!

**இவளல்லவோ என் மருமகள்!! இல்லை இல்லை என் மகள்!!**

**இப்படி வந்திருந்த எல்லோரிடமும் என் மாமியார் என்னைப் பாராட்டிக் கொண்டே இருந்தார்கள்!! நடந்தது இது தான்!!**

என் மாமியாருடைய திருமண நாளுக்கு நல்ல பரிசளிக்க வேண்டும் என நானும் என் கணவரும் யோசித்த போது முதலில் பட்டுப்புடவை வாங்கலாமா என நினைத்தோம். ஆனால் பட்டுப்புடவையின் கனமும், கட்டிக் கொண்ட சில மணி நேரங்களிலேயே எப்போது இந்த புடவையை மாற்றிக்கொள்வோம் என எல்லோரும் படும் அவஸ்தையும் மனதில் தோன்றியது.

அப்போது பளிச்சென ஓர் புதிய யோசனை! இப்படி செய்தால் என்ன? பிரசாந்தியின் சில்க் காட்டன் புடவைகளைப் பற்றி ஊரே பேசுகிறது! என்னவென்று? பிரசாந்தியின் சில்க் காட்டன் புடவைகள் பலப்பல வண்ணங்களிலும், கண்ணைக்கவரும் புதுப்புது டிசைன்களிலும் கிடைக்கிறது. லைட் வெயிட்டாக இருப்பதால் கட்டிக் கொள்ள எளிதாக இருக்கிறது. மேலும் சுலபமாக மெயின்டெயின் செய்து நீண்ட நாள் உடுத்திக் கொள்ளலாம். பிறகென்ன! எங்கள் எண்ணம் செயலானது. பிரசாந்திக்கு நானும் என் கணவரும் சென்று பட்டுப்புடவை பட்ஜெட்டில் இரண்டு சூப்பர் சில்க் காட்டன் புடவை, ஆம், பிரசாந்தியில் இருந்த கலெக்‌ஷனில் மனதைப் பறி கொடுத்த நாங்கள் ஒரு புடவைக்கு பதில் இரண்டு புடவைகளாக செலக்ட் செய்து பரிசளித்தோம்.

என் மாமியாருக்கோ மட்டற்றமகிழ்ச்சி! என்னை கண்ணில் நீர்மல்க ஆனந்த கண்ணீருடன் ஆரத்தழுவி, "எனக்கு பிடித்த பிரசாந்தியின் சில்க்காட்டன் புடவைகளையே வாங்கிகொடுத்து என்னை அசத்திவிட்டாயே!" என சொல்லி சொல்லி மகிழ்ந்து போனார். எங்களுக்குள் இருந்த பாசமும் பந்தமும் மேலும் கூடியது என்பதை சொல்லவும் வேண்டுமோ? பிரசாந்திக்கு என் நன்றி!

## *சில்க் காட்டன் என்றாலே பிரசாந்திதான்!!*

Prashanti, No. 16, 6th Cross St, C.I.T. Colony, (Near Alwarpet Chettiar Hall), Mylapore, Chennai-4. Ph: 24991850 / 24997636. Sunday Holiday

Prashanti's Paripurna, No. 52, 4th Main, 17th Cross, Malleswaram, Bangalore. Ph: 23341632. Tuesday Holiday

E-mail:prasanti_sarees@yahoo.com — MASTER AND VISA CARDS ACCEPTED



# உங்கள் இல்லம் புதுப்பொலிவுடன் விளங்க







**தங்கம் & செம்பு Platings**

Show room:
Next to Jeeva Park, Old # 85, G.N. Chetty Road, T. Nagar, Chennai - 17.
Tel: 2815 6370 Mobile: 98400 21384. www.thejus.com

Timings: 9.30 am to 7.00 pm — SUNDAY HOLIDAY

for online purchase visit:
www.chennaionline.com www.indiavarta.com

# 'பொடி நடை போட்டு... பொடரியில் ஏறு!'

இடைத்தேர்தலில் தி.மு.க கூட்டணி ஊ...த்திக் கொண்டதில் ரொம்பவே வருத்தத்தில் இருக்கும் கலைஞரை, சூரியன் FM வேறு 'கொடுத்தவனே பறிச்சிக்கிட்டாண்டி...', 'மன்னவனே அழலாமா...' ரேஞ்சு பாடல்களைப் போட்டு குமுட்டி அடுப்பு போல குமுற வைத்துக் கொண்டிருந்தது. இந்தச் சூழ்நிலையில், கலைஞருக்கு ஆறுதல் சொல்ல, கூட்டணித் தம்பிகள்... மன்னிக்கவும்... தலைவர்கள் கோபாலபுரம் வருகின்றனர். இந்தச் சாக்கில் வரும் பொதுத்தேர்தலுக்கான சீட்டு பேரத்தையும் முடித்து, சந்தில் சிந்து பாடும் நினைப்பில் அவர்கள் வர, கலாட்டா ஆரம்பமாகிறது.

(கலைஞர் வீட்டுக்குள் எஸ்.ஆர்.பி சகிதம் நுழைகிறார் ஜி.கே. வாசன்.)

**கலைஞர்:** (வாசனைப் பார்த்து அழுதபடி.) உன் குத்தமா... என் குத்தமா... யாரை நானும் குத்தம் சொல்ல...

**வாசன்:** வருத்தப் படாதீங்க.... (நைலான குரலில்) எல்லாத்துக்கும் இந்த ஈ.வி.கே.எஸ்தான் காரணம்னு சோனியாஜிகிட்ட போட்டுக் கொடுத்துடலாம். அப்புறம் அடுத்த கச்சேரி பத்திப் பேசலாம்னு... (இழுக்கிறார்)

**கலைஞர்:** ஆமாமா... உங்க சோலி உங்களுக்கு... சரி... தம்பி... உங்களுக்கு எத்தனை குருப்பு... ச்சீ... சீட்டு வேணும்னு சொல்லுங்க... அப்பத்தானே நீங்க குஸ்தியை ஆரம்பிக்க வசதியா இருக்கும்... என்ன நான் சொல்றது?

(வாசலில் திடீரென 'இடிதாங்கி வாழ்க! குடிதாங்கி வாழ்க!' என்று சத்தம்... டாக்டர் ராமதாஸ் தலையில் துண்டைப் போட்டபடி கலைஞர் வீட்டுக்குள் நுழைகிறார். அவருடைய வேட்டியைப் பிடித்துக் கொண்டு பம்மிப் பம்மி நுழைகிறார் திருமாவளவன்.)

**வாசன்:** (மனத்துக்குள் - இவங்களுக்கு எப்படித்தான் மூக்குல வேர்க்குதோ தெரியலை.) கலைஞர் ஐயா... நான் போயி அந்தப் பத்தாயத்துக்குப் பின்னால ஒளிஞ்சுக்கறேன் (என்று சொல்லிவிட்டு பீரோவுக்குப் பின்னால் ஒளிந்து கொள்கிறார்.)

**கலைஞர்:** (தலையில் அடித்துக்கொண்டு) இந்தத் தம்பிக்கு பீரோவுக்கும், நெல்லு கொட்டி வைக்கிற பத்தாயத்துக்குமே வித்தியாசம் தெரியல. இதுல சீட்டு வேற கேக்குது... எல்லாம் என் தலையெழுத்து.



(அறைக்குள் ராமதாசும், திருமாவும் நுழைகின்றனர்)

**கலைஞர்:** அடடே... வாங்க வைத்தியரே... என்ன காத்து இறங்கிப் போன பலூன் கணக்கா இருக்கீங்க... ஏதுனா புது நியூஸ் கீதா? (என்று பா.ம.கவினர் தமிழ்ப் பலகையை வைத்து நக்கலடிக்க)

**ராமதாஸ்:** (பல்லைக் கடித்தபடி) காத்து இறங்கிப் போனது எல்லாருக்கும்தானே... சரி. நடந்தவை நடந்தவையாக இருக்கட்டும். இனி நடப்பவை நல்லவையாக இருக்கட்டும்ங்கறதுதான் நம்ம பாலிஸி...

**கலைஞர்:** என்ன பாலிஸி... பெரிய LIC பாலிஸி... வயிற்றெரிச்சலைக் கொட்டிக்காதீங்க வைத்தியரே... சரி... சரி மேட்டருக்கு வாங்க.



**திருமாவளவன்:** மருத்துவர் ஐயாவை தமிழ்க் குடிதாங்கி என்னும் செம்மொழியில் செப்பலாம்.

**கலைஞர்:** க்கும்... ரொம்ப முக்கியம்... தம்பி நீ இப்படி ஓரமா குந்து. பெரியவங்க பேசிட்டு இருக்கறப்ப, குறுக்க பூந்து சின்ன புள்ளத்தனமா பேசிக்கிட்டிருக்காதே... (திருமா கப்சிப்)

**ராமதாஸ்:** இந்தம்மா ரொம்ப எகத்தாளமா பேசிட்டுத் திரியுது... அதான் நமக்குள்ள சீட்டு பேரத்தை பாண்டிச்சேரியோட சேர்த்து முடிச்சுப்புட்டா, நம்ம பசங்களை மரம் வெட்ட... ச்சீ... வோட்டு கேக்க அனுப்பிடலாம்னு...

**கலைஞர்:** (இந்தாளுகிட்ட கொஞ்சம் ஓவராப் பேசினா பொசுக்குன்னு கூட்டணிக்கு ஜூட் விட்டுடுவாரே..) இதுலெல்லாம் ரொம்ப ஜூடாத் தான் இருக்கீங்க. சரி வைத்தியரே... உங்களுக்கு எத்தனை தேவைப்படுது....

**ராமதாஸ்:** எனக்கு அம்பது - திருமாவுக்கு இருபது...

(இதற்குள் தயாநிதி மாறன் ரூமுக்குள் தலை தெறிக்க ஓடி வருகிறார். "தாத்தா...



வைகோ மாமா உங்களைப் பார்த்து, துக்கம் விசாரிக்க அண்ணாநகர்ல இருந்து நடந்தே கோபாலபுரம் வர்றாரு'' என்று சொல்ல)

**ராமதாஸ்:** தம்பி... (தயாநிதியைப் பார்த்து) நீங்க போயி அவரை வாசல்லயே மடக்குங்க. அதுக்குள்ள நாங்க எதுனா ஒரு மரத்துக்கு பின்னால ஒளிஞ்சுக்கறோம்.

**கலைஞர்:** இங்கெல்லாம் மரமில்ல. வேணும்னா அந்த பீரோவுக்குப் பின்னால இடமிருக்கு. போயி ஒளிஞ்சுக்கங்க.

(இருவரும் அங்கு செல்ல, அங்கு ஏற்கெனவே ஒளிந்திருக்கும் வாசனும், எஸ்.ஆர். பியும் இவர்களைப் பார்த்து மிரள்கின்றனர்.)

("புலி நடை போட்டு புதருல ஏறு... பொடி நடை போட்டு பொடரியில் ஏறு...!" என்று பாடியபடி வைகோ கலைஞர் அறைக்குள் நுழைகிறார்)

**வைகோ:** அண்ணே... (தலையில் அடித்துக் கொண்டு...தேம்பித் தேம்பி அழுகிறார்)

**கலைஞர்:** (மனத்துக்குள் - ஆஹா அழுகை நாயகன் வந்துட்டாருய்யா...) என் அன்புக் கண்மணியே... நீ ஏன் கலங்குகிறாய்.. உன்னைப் போன்ற ஆசாமிகளையெல்லாம் நம்பி களத்தில் இறங்கிய நானல்லவா அழ வேண்டும்.

**வைகோ:** (அழுதபடியே பேசுகிறார்) அண்ணே.. இதுக்கு மேல் என்னால தாக்குப் பிடிக்க முடியாதுண்ணே... அதனால நீங்க சிக்கிரமா எங்களுக்கு சீட்டு ஒதுக்கிக் கொடுத்திங்கன்னா, அதை வச்சி... தேர்தல் நிதி... அது இதுன்னு ஓரளவுக்கு தேத்திக்குவேன். (மீண்டும் குமுறிக் குமுறி அழுதபடி, கலைஞர் மடியில் சாய்கிறார்.)

**கலைஞர்:** (வைகோவின் பின் தலை முடியைக் கோதியபடி) சரி... சரி... அழாதே கண்மணி... உனக்கு எத்தனை சீட்டுகள் வேண்டும். அதற்கு முன் அங்கு நிற்க ஆள் இருக்கிறதா என்று பார்த்துக் கொள்...

**வைகோ:** (அழுதபடி கலைஞரை நிமிர்ந்து பார்க்கிறார்)

**கலைஞர்:** அடுத்து ஒரு விஷயம் தம்பி... நீ பொதுக் கூட்டங்களில் பேசும்போது, 'கலைஞர்தான் அடுத்த முதல்வர்' என்று பேசி ஸ்டாலினுக்கு ஆப்பு வைக்கும் வேலையை நிறுத்திக் கொள்வது சாலச் சிறந்தது.

**வைகோ:** (குரலை உயர்த்தியபடி) அய்யகோ... என் பாசத்தை என் வேஷத்தை.... சாரி நேசத்தைக் கொச்சைப்படுத்தாதீர்கள். (சட்டென்று மஞ்சள் துண்டால் கலைஞர் கையையும் தன் கையையும் மூடி விரல் பேரம் பேசுகிறார்.) எனக்கு முப்பது சீட் கொடுத்தால் போதும்... அதை வைத்து பிக் - அப் ஆகிக் கொள்கிறேன் அண்ணா!

(இந்தச் சமயத்தில் இரண்டு கம்யூனிஸ்ட் தலைவர்களும் வருவதாகத் தகவல் கிடைக்க, வைகோ சட்டென்று கட்டிலுக்கு அடியில் புகுந்து கொண்டு, கறுப்புத் துண்டால் முகத்தை மூடியபடி ஏனோ பொங்கிப் பொங்கி அழுகிறார்...)

**கலைஞர்:** அடடா... தோழர்களுக்குக் கூட தேர்தல் ஜுரம் வந்துடுச்சு போல...

**நல்லகண்ணு:** ஆமாங்க... எப்போ பார்த்தாலும் எல்லாருக்கும் சீட்டு ஒதுக்கி முடிச்சுட்டு, மீந்து இருக்கறதை ரெண்டா வகுந்து எங்ககிட்ட தள்ளிவிட்டுடுறீங்க... அதான் அட்வான்ஸா வந்து ஆளுக்கு பத்து வாங்கிடலாம்னு.... (இழுத்தபடியே பேச)

**கலைஞர்:** (மனக்கணக்கு போட்டபடி) இவங்களே நூத்தி எண்பது சீட்டு கேக்குறாங்க. அப்புறம் ஆர்.எம்.வீ, முஸ்லீம் லீக்கு.. அது.. இதுன்னு ஒரு பதினைஞ்சு போயிடும். மீதி இருக்கிற முப்பத்தொன்பது சீட்டுலதான் நாம நிக்கணுமா.. இதெல்லாம் ஆவுறதில்ல... எலெக்‌ஷன் கமிஷன்கிட்ட எக்ஸ்ட்ரா அம்பது சீட்டு ஆர்டர் பண்ண வேண்டியதுதான்.



**தயாநிதி மாறன்:** (இடைமறித்து) ஆமா தாத்தா... இதெல்லாம் ஆவுறதில்ல. எல்லாருக்கும் இதயத்துல இடம் கொடுத்துறலாம் தாத்தா!

(அவ்வளவுதான்... இதைக் கேட்ட கூட்டணித் தம்பிகள் அனைவரும் அலற ஆரம்பிக்கின்றனர்.)

கற்பனை: **கலை**

# புக் பேங்க்




**நலமுடன் வாழலாம் - சுப்ர.பாலன், கங்கை புத்தக நிலையம், சென்னை - 17. விலை ரூ.70/-**

மருத்துவக் கட்டுரைகளுக்கு வாசகரிடையே தனி வரவேற்பு உண்டு. சிகிச்சையின்போது டாக்டரிடம் சில கேள்விகளைக் கேட்கத் தோன்றும். ஆனால் அவர் பதில் சொல்வாரோ, கோபித்துக் கொள்வாரோ என்ற தயக்கத்தில், கேள்விகளை எல்லாம் நமக்குள்ளேயே அமுக்கி அடைத்து விடுவோம். ஆனால், மருத்துவக் கட்டுரை எழுதும் எழுத்தாளருக்கு அந்த பயமே கிடையாது! அவர் கேட்கிற கேள்விகளுக்கெல்லாம் டாக்டர் பதில் சொல்லத்தான் வேண்டும்.

உடல் பருமன், கண்கள், மூக்கு, சிறுநீரகம், இதய நோய், புற்றுநோய், குழந்தை வளர்ப்பு, நடுத்தர வயதுப் பிரச்னைகள், தேர்வுக்குப் படிப்பது எப்படி என்று ஒவ்வொரு சிறப்பு மருத்துவரிடமும் போய்த் தகவல்கள் திரட்டிக் கட்டுரைகளை விவரமாக எழுதியிருக்கிறார் ஆசிரியர்.

மதுப் பழக்கத்துக்கு அடிமையான குடும்பத் தலைவரைப் பற்றியும், புற்றுநோயிலிருந்து மீண்ட மிலாவைப் பற்றியும் சிறுகதைகளாகப் படைத்திருக்கிறார். கட்டுரைத் தொகுதியில் திடீரென்று இப்படி சிறுகதை வடிவம் முளைப்பது, வாசகரது கவனத்தைச் சிதறடிக்கிறது. ஆசிரியர் இந்த இரண்டு சிறுகதைகளையும் கட்டுரையாக மாற்றியிருந்தாலோ அல்லது நீக்கிவிட்டிருந்தாலோ நன்றாக இருந்திருக்கும்.

**- சாருகேசி**




# சக்திவாய்ந்த நடை!

**கூச்ச சுபாவம் உங்கள் முன்னேற்றத்துக்குத் தடையாக இருக்கிறதா? - சாருகேசி, சிபி.ஹெச். பப்ளிஷர்ஸ் அண்ட் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ், 20, விஜயலெக்ஷ்மி தெரு, மகாலிங்கபுரம், சென்னை - 34. விலை ரூ.49.00**

கொஞ்சம் நீளமான தலைப்புகள் ஆங்கிலம் வழி தமிழுக்கும் வந்துவிட்டன. வாழ்க்கையில் பலருடைய முன்னேற்றத்துக்கும் தடையாக இருப்பவை, கூச்ச சுபாவமும் வீணான தயக்கங்களும்தாம் என்பது எல்லோருக்குமே தெரிந்தவை. பலருக்கு சிறு வயதுத் தயக்கங்கள், கூச்சங்கள் எல்லாம் அனுபவம் சேரச் சேர விலகிவிடும் என்பதால், இந்தப் பிரச்னையின் பரிமாணம் சரிவர உணரப்படுவதில்லை.

ஆனால், அதிலேயே அமிழ்ந்துபோய் வீணாகி விடுகிறவர்களின் நிலை? சாருகேசி இந்தப் பிரச்னைகளை மிகவும் சக்திவாய்ந்த, அதே சமயம் எளிய உரைநடையில், ஏழு தலைப்புகளில், விவாதித்துத் தெளிவுபடுத்துகிறார்.

கூச்ச சுபாவம் உள்ளவர்கள், தாம் அப்படி ஒரு நிலையில் இருப்பதைப் பெரும்பாலும் உணர்ந்தவர்கள். அவர்கள் இந்த நூலைப் படித்துப் பயன்பெறலாம். மற்றவர்களும் படித்துப் பிரச்னையின் ஆழத்தைப் புரிந்து கொள்ளவாவது முயலலாம். புத்தகம் படிக்கக்கூடக் 'கூச்சப்படுகிறவர்களை' கடவுள் கூடக் காப்பாற்ற முடியாதே!

**- சுப்ர.பாலன்**

சிறுகதை

# ஒரு கேள்வி!

கஸ்தூரிபாய் ரயில்வே ஸ்டேஷன் இருட்டில் இதமாக இருந்தது. எதிர்ப்புறம் இரண்டொரு விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. ஸ்டேஷன் நல்ல உயரத்தில் இருந்தது. அமைதி. துலக்கி வைத்த அமைதி. செல்வத்துக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. மணி அண்ணனும் பேசவில்லை.

நாளை செய்யாறு கிளம்பியாக வேண்டும். நான்கு நாட்கள் அண்ணனோடு போனது தெரியவே இல்லை. ஒவ்வொரு கணமும் அண்ணனின் பாதுகாப்பும் அரவணைப்பும்தான் கண்களில் தெரிந்தது. இத்தனைக்கும் ஊரில் அண்ணனோடு பழகியது மிகச் சில சமயங்களில்தான். பேசியது அதைவிடக் குறைவு. அப்பாவின் நண்பர் மகன். வயதில் மூத்தவர். அவர் கல்லூரி போன நாட்களில், செல்வம் பள்ளியையே தாண்டவில்லை.

அப்பா போன் பண்ணிக் கேட்டுக் கொண்டார் என்றுதான் இத்தனை பாதுகாப்பு, அரவணைப்பு. தாம்பரத்தில் வந்து இறங்கியது முதல், ஒவ்வொரு கல்லூரியாகப் போய் அட்மிஷன் ஃபார்ம் வாங்குவது, அதற்குத் தேவையான டிடி எடுப்பது, போட்டோக்கள் ஒட்டி ஃபார்மை நிறைவு செய்வது என்று அண்ணன் ஓடாத ஓட்டமில்லை. இன்னும் +2 தேர்வு முடிவுகள் வெளியாகவில்லை. இரண்டொரு வாரத்தில் வந்துவிடும் என்றிருக்கிறார்கள். எப்படியும் நல்ல மதிப்பெண் வந்துவிடும் என்ற நம்பிக்கை இருந்தது. அந்த நம்பிக்கைதான் சென்னை வரை அவனைத் துரத்தியதும். முதலில் ஒரு பி.காம். பிறகு எம்.காம். அப்புறம் சி.ஏ. எங்கேயாவது நல்ல ஆடிட்டரிடம் சேர்ந்துவிட்டால் போதும். சி.ஏ.வை ஒரே வேகத்தில் முடித்துவிட்டால், கண்டேன் கண்டேன் என்று கொத்திக்கொண்டு போகமாட்டார்களா என்ன? அவன் குடும்பத்தில் யாருமே படிக்காத படிப்பாக இருக்கும். அந்த வேகமும் ஆசையும்தான் இவ்வளவு தூரம் அவனைத் துரத்தியது.

தூரத்தில் வெளிச்சக் குழல் தெரிய, அண்ணன் திரும்பிப் பார்த்தார். "வண்டி வருது... இது திருவான்மியூர் ஸ்டேஷன் போயிட்டுத் திரும்பி வரும்."

வண்டி சின்னதாக ஒரு குலுங்கல் காட்டி நிற்க, "ஏறிப்போமா? திருவான்மியூர் போயிட்டு திரும்பி வருவோம்" சரியென்று செல்வம் தலையாட்ட, சட்டென ஒரு பெட்டியில் ஏறிக் கொண்டனர்.

மணிக்கு இந்த வாரம் மதிய ஷிப்ட். செல்வம் வந்ததால், நடுவே ஒரு நாள் விட்டு ஒரு நாள் விடுமுறை எடுத்து விட்டார். இன்று நேராகக் கட்டடம் கட்டும் சைட்டுக்கே வந்துவிடச் சொல்லியிருந்தார். விட்டுப்போன இரண்டு கல்லூரிகளில் அன்று அப்ளிகேஷன்களை வாங்கிக்கொண்டு, நேரே அவர் சொன்ன அடையாறு சைட்டுக்கே செல்வம் வந்து சேர்ந்தான். பெரிய இடம். எண்ணற்ற அடுக்ககங்கள் வரவிருந்தன. அண்ணன்தான் டிராப்ட்ஸ்மேன். அவரைப் போல் இன்னும் இரண்டு டிராப்ட்ஸ்மேன்கள் இருந்தார்கள். இரவும் பகலுமாக வேலை நடந்து கொண்டிருந்தது. செல்வம் ஓரமாக உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தான். நடு நடுவே இன்ஜினியர், அவர் இவர் என்று பலர் வந்து பேசிக்கொண்டே இருந்தார்கள். அண்ணன் எல்லோருக்கும் பதில் சொல்லிக் கொண்டிருந்தார். கோபம் வர வேண்டிய இடத்திலும்

அமைதியே கோலோச்சி யது. அதைப் பணிவு என்று சொல்வதைவிட, பயம் என்று சொல்லலாம்.

ஏன் பயம்? இந்த வேலை இல்லையென்றால், அடுத்தொன்று. எதற்கு இப்படிக் கும்பிடு போட வேண்டும்? தெரியவில்லை. மணியிடமே கேட்க நினைத்தவன்,

"அண்ணே, உங்களை மத்தியானமே கேக்கணும்னு நினைச்சேன்..." என்றான்.

மணி அண்ணன், செல்வத்தைத் திரும்பிப் பார்த்தார்.

"யார் யாரோ வந்து உங்களை மெரட்டறாங்க, அதிகாரம் பண்றாங்க? நீங்க சும்மா பதில் சொல்றீங்களே..? உங்களுக்குக் கோபமே வரலியே..."

மணி அண்ணன் அவனைப் பார்த்துச் சிரித்தார். கோபமா? அவருக்கு இன்னும் சிரிப்புதான் வந்தது. யார் மேல் கோபப்பட முடியும்?

ஏன் சிரிக்கிறார் என்று செல்வத்துக்குப் புரியவில்லை. தன் தலையெழுத்தை நினைத்துக் கோபப்படலாம். தான் ஏதோ தப்பாகக் கேட்டு விட்டோமோ என்ற எண்ணம் சட்டென செல்வத்தைத் தாக்கியது. தன் எதிர்காலம் தன் கையில் இல்லாமல் போனது பற்றிக் கோபப்படலாம். ஆனால், கோபம்தான் வரமாட்டேன் என்கிறதே?

ரயில் திருவான்மியூர் ஸ்டேஷனை அடைய, முண்டியடித்துக் கொண்டு கூட்டம் பக்கவாட்டில் ஓடி வந்தது. அவசர அவசரமாக ஜன்னல் வழியாக கர்ச்சீப், பை, சாப்பாட்டு கூடை என்று உள்ளே எறிந்து இடம்பிடிக்க முயற்சித்தார்கள். இறங்குபவர்களுக்கு இடம் தராமல், ஏற முயற்சித்துக் கொண்டிருந்தார்கள்.

எல்லாம் ஒரு சில நிமிடங்கள்தான். அப்புறம் அவரவர் அவரவர் உலகங்களில். ஒருத்தர் பேப்பரில், மற்றவர் ஒரு புத்தகத்தில்... நிறைய பெண்கள், தங்கள் செல்பேசிகளோடு. நிறைய அலுப்பு. நிறைய கவலை. தூரத்தில் ஒளிர்ந்த டைடல் பார்க்கின் கசக்கிப் பிழிந்த மிச்சங்கள்.

மணி, அந்தக் கட்ட

ஆர். வெங்கடேஷ்

டத்துக்குள் போய்ப் பார்க்க வேண்டும் என்று நினைத்திருக்கிறான். ஒவ்வொரு முறை இந்தப் பக்கம் போகும்போதெல்லாம் மனது அடித்துக்கொள்ளும். பளபளவென கண்ணாடி பளிச்சிடும் கட்டடம். வாசல் தொடங்கி, அரண் போல் பாதுகாவல். அதுவும் காலை வேளைகளில், கூட்டம் கூட்டமாக பெண்கள் மிடுக்குடன் நடந்து போவதைப் பார்ப்பதே அழகு. படிப்பு தந்த மிடுக்கு. அறிவு தந்த வாழ்வு. முடிந்தால், அங்கே வேலை செய்யும் ஏதேனும் ஒரு பெண்ணைக் காதலித்தாவது கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்று நினைத்துக் கொள்வான் மணி. தன் பக்கத்தில் வந்தமர்ந்த பெண்ணைப் பார்த்தான். தீவிரமாக செல்பேசியில் யாருக்கோ குறுஞ்செய்தி அனுப்பிக் கொண்டிருந்தாள்.

அவள் கால் மாற்றி உட்கார்ந்த போது, மணி மேல் இடித்தது. அவன் அவசரமாய் நகர்ந்ததைச் சட்டென உணர்ந்து, மன்னிப்புக் கேட்டாள். ஒரு கணம்தான். அழகை மனசுக்குள் அனுமதிக்காமல் இருக்க முடியுமா? பின் ரொம்ப நேரம் சிரமப்பட்டு, தன் எண்ணத்தை மணி திருப்பினான். கயிற்றை அறுத்துக் கொண்டு ஓடும் கன்றுக்குட்டியென மனம் தறிகெடுவதை அவனால், தடுக்க முடியவில்லை.

**ம**ணி அண்ணன் பதில் சொல்லவில்லையென்பது செல்வத்துக்கு உறுத்தலாக இருந்தது. வழக்கம்போல், அவசரப்பட்டுவிட்டோமோ என்ற எண்ணம் வந்து தொலைத்தது. பல சமயங்களில் திண்டாடுபவர் அப்பாதான். ஆனாலும் பொறுமையாக எடுத்துக் கொண்டார். இப்போது சென்னை அனுப்பியது வரை, அவனது அதிகப்பிரசங்கித்தனத்தின் விளைவுகள்தான் எல்லாமே.

காஞ்சிபுரத்திலேயே படித்திருக்கலாம். சென்னை செல்வத்தின் விருப்பம். பத்தாவது முடித்தவுடனேயே அப்பா ஐ.டி.ஐ போய்ப் படிக்கச் சொன்னார். மேலே வந்தது, செல்வத்தின் பிடிவாதம். பின்னர் இன்ஜினீயரிங், அப்பா விருப்பம். வணிகம், அவன் விருப்பம். ஒவ்வொரு மாற்றமும், பேச்சுக்களின் வலியில் உதித்தவைதாம். அப்பா விருப்பம் என்று எதையும் தான் இதுவரை ஏற்றுக்கொண்டதில்லை என்பது ஏனோ செல்வத்துக்கு ஞாபகம் வந்தது. உண்மைதான். அவன் விருப்பத்தைத்தான் அவர் நிறைவேற்றி வருகிறார். கோபமில்லை. வருத்தமில்லை. ஆனால், நெஞ்சில் வலி இருக்குமோ? இருக்கலாம். ஆனால், தன்னால் வேறெப்படியும் இருக்க முடியுமென்று தோன்றவில்லை. தனக்குப் பிடித்ததைச் செய்ய மட்டுமே முடியும்.

"**நா**ன் ஏதாவது தப்பா கேட்டிருந்தா, தப்பா எடுத்துக்காதீங்கண்ணா..."

திருவல்லிக்கேணி ஸ்டேஷனைவிட்டு வெளியே வரும்போது, செல்வம் பேசினான்.

"சேச்சே... என்ன தப்பு? ஒரு தப்புமில்லப்பா..."

**'கனவுகளை இழந்தவர்களுக்கு கனவுகளோடு வாழ்பவர்களைப் பார்ப்பது பெரும் கனவு!'**

மீண்டும் செல்வத்தின் கேள்வி, மணிக்கு ஞாபகம் வந்தது. ஞாபகம் வந்தது என்பதை விட, ஞாபகத்தின் மேல் தளத்தில்தான் அது இருந்தது. சொல்லப் போனால், அதை அவன் மறக்கவே முயன்றான். மறக்க மறக்க, அது மேலெழும்பிக் கொண்டேதான் இருந்தது.

"பீச்சுக்குப் போய் உட்கார்ந்துட்டு போவோமா?"

மணி கேட்க, செல்வம் தலையாட்டினான். கடற்கரைச் சாலையைக் கடந்து எதிர்ப்பக்கம் வந்து சேர்ந்தார்கள். கூட்டம் அவ்வளவாக இல்லை. வேலை நாள். விடுமுறைகளில் கூட்டம் மிகுந்திருக்கலாம்.

"கோபப்படணும். கோபப்படலாம்.



''ஒவ்வொரு காலகட்டத்திலேயும் நான் அடுத்தவங்களோட தயவுலதான் வாழ்ந்திருக்கேன். அவங்களோட எண்ணத்தைப் புரிஞ்சிக்கிட்டுதான் எல்லாம் செஞ்சிருக்கேன். அப்பா சொன்னபடி படிப்பு. மாமா வாங்கிக் கொடுத்த வேலை. யாரையும் நான் கேள்வி கேக்கல. சொல்றதைச் செஞ்சேன். எனக்குன்னு நான் எதையும் யோசிச்சதில்லை. அதனால கூட கோபம் வராமலிருக்கலாம்.''

''அண்ணா, நீங்க அதை மறந்துடுங்கண்ணா, நான் ஏதோ வாய் தவறிக் கேட்டுட்டேன்.''

''இல்ல செல்வம். நீ கேட்டது சரிதான். நீ அப்படி இருக்கக் கூடாது. இருக்காதேங்கறதுக்காகத்தான் சொல்ல வந்தேன். உங்கப்பா என்கிட்ட பேசும்போது, 'அவன் மெட்ராஸ்ல பி.காம் படிக்கணும்னு பிடிவாதமா இருக்கான்பா. சொன்னா கேக்க மாட்டேங்கறான். என்ன செய்யறதுன்னு தெரியல. அனுப்பி வெக்கறேன். ஃபீஸ்மெல்லாம் வாங்கிக் கொடுப்பா'ன்னார். எனக்கு அப்பவே உன்னைப் பிடிச்சுப் போச்சு. எனக்கு உன் அப்பாவோட நிலைமை தெரியும். ஆனாலும் உன் பிடிவாதம் சரின்னு தோணிச்சு. அப்படித்தான் இருக்கணும். நாம எங்கே போகணும்ங்கற தெளிவு இருக்கணும். என்னவா ஆகணும்ங்கற தெளிவு இருக்கணும். அதை அடைய பிடிவாதம் வேணும். எனக்கு அது எதுவுமே இல்லாமப் போச்சு. அதான் இன்னிக்கு எல்லார்கிட்டேயும் திட்டு வாங்கிக்கிட்டு நிக்கறேன்.''

செல்வம் மணலை அளைந்து கொண்டிருந்தான். தெரியவில்லை. தன் பிடிவாதத்துக்கு இவ்வளவு தூரம் பொருள் இருக்கும் என்று அவன் நம்ப வில்லை. கனவு மட்டும்தான் அவனைத் துரத்திக் கொண்டிருந்தது. கனவுகளை இழந்தவர்களுக்கு, கனவோடு வாழ்பவர்களைப் பார்ப்பது பெரும் கனவு. மணி, அப்புறம் ரொம்ப நேரம் பேசவில்லை. தூரத்தில் அடுத்தொரு ரயில் வண்டி தடதடவெனப் போய்க் கொண்டிருந்தது தெரிந்தது. செல்வம், மணி அண்ணனைப் பார்த்தான். அவர் கிளம்பலாம் என்பது போல், மணலைத் தட்டிக் கொண்டு எழுந்தார்.

எப்போ கோபப்படலாம்னா, நமக்குத் தகுதி இருக்கும்போது கோபப்படலாம். நம்ம தகுதி அடுத்தவனுக்குத் தெரியும் போது கோபப்படலாம். நம்ம பேச்சு எடுபடும்னா கோபப்படலாம்.''

அண்ணன், தான் கேட்ட கேள்வியை இன்னும் மறக்கவில்லை. அதுதான் அவர் மனத்தில் அப்போதிலிருந்து வளைய வந்து கொண்டிருக்கிறது.

''என்னால கோபப்பட முடியாது. நான் கோபப்பட்டா, அடுத்த வேலையைத் தேடிக்க வேண்டியதுதான். அடுத்த வேலை கிடைக்கும்னு நம்பிக்கை இருந்தா கோபப்படலாம். எனக்கு அது இல்ல.''

செல்வம், மணி அண்ணனின் கண்களையே பார்த்தான். அதில் தெரிந்த சுயவெறுப்பை அவனால் உணர முடிந்தது. பேச முடியவில்லை.

# மீண்டும் சிம்ரன்!

அந்தப் புடவை விளம்பரத்தை அநேகமாக எல்லோருமே டீ.வியில் பார்த்திருப்போம். தன் காதலனின் வீட்டுக்கே சென்று, அவனை மணக்கச் சம்மதம் கேட்கும் இன்றைய மண மகளாய் ஜொலித்திருப்பார் ஒரு அழகிய மங்கை.

'யார் இந்தப் பெண்!' என்று பார்க்கும் யாவரையும் ஒரு நிமிடம் 'அட' போட வைத்த அந்த விளம்பர மாடல் தாமனா, இப்போது தமிழ் சினிமா கதாநாயகி. ஆம்... ஏ.எம்.ரத்னம் தயாரிக்க, ஜோதி கிருஷ்ணா இயக்கத்தில், ரவி கிருஷ்ணா ஜோடியாக 'கள்ளன்' படத்தில் ஒப்பந்தமாகியிருக்கிறார் இந்த மும்பைப் பெண். அண்மை யில் சென்னைக்கு வந்திருந்த வரை சந்தித்துச் சுடச்சுடப் பேசினோம்.

**தமிழ் சினிமா வாய்ப்பு எப்படிக் கிடைத்தது?**

''இப்போ என் வயசு பதி னைஞ்சு. ஹிந்தி சினிமாவுக்குள் நுழையும்போது எனக்கு பதி மூணு. நான் தியேட்டர் ஆர் டிஸ்ட். என் ஸ்கூல் டீச்சர் மூலமாத்தான் எனக்கு சினிமா சான்ஸ் கிடைச்சுது. ஆனா அந்தப் படம் செம ஃப்ளாப். இட்ஸ் ஓ.கே. நல்ல படிப்பினையோடு தான் உள்ளே நுழைஞ்சிருக்கேன். தெலுங்குல மோகன்பாபு தயாரிப்புல ஒரு படம், தமிழ்ல ஏ.எம்.ரத்னம் படம்.''

**டீ.வி. விளம்பரத்துல கலக் கிட்டீங்களே?**

''ஆமா. இப்படியொரு அற்புதமான கான்செப்ட்ல உருவான விளம்பரத்தை

வு!

ம்பையில கூடப் பார்த்தது கிடையாது. நான் பார்க்க சின்னப் பொண்ணா இருந்தாலும், சேலை கட்டின உடனே கல்யாணத்துக்கு ரெடியாகற அசல் தமிழ்ப் பொண்ணா மாறிட்டேன். அந்த விளம்பரத்துல பெரிய வங்களை மதிக்கிற மாதிரி எடுத்தது, ரொம்ப கரெக்ட். எப்படி அப்பா, அம்மாவை நாம மதிக்

கடைசி வரைக்கும் நம் கூடவே வர்றவங்க அவங்கதானே. இந்த வயசுல நான் சொல்லக் கூடாதுதான்... இருந்தாலும் சொல்றேன்... கல்யாணம்னு வந்துட்டா, அரேஞ்டு மேரேஜ்தான் பெஸ்ட். அம்மா - அப்பா வழித்துணை இல்லாம எது பண்ணினாலும் அது ஆபத்துலதான் முடியும்."

**"தமிழ் சினிமா பிடிச்சிருக்கா?"**

"எங்க ஊர் சிம்ரன் உங்க ஊர்ல ஜெக



கிறோமோ, அதுபோல புகுந்த வீட்டு மனிதர்களையும் மதிக்கணும். என்ன இருந்தாலும்

ஜோதியா வாழ்ந்ததை எல்லோரும் சொல்லியிருக்காங்க. 'மீண்டும் சிம்ரன் வந்துட்டா'ன்னு ரசிகர்கள் சொல்ற அளவுக்கு ஜெயிக்கணும்ங்கறது தான் என் கனவு."

தாமனா

**- சநகன்**

# தவறாக நினையாதே!

நாம் ரொம்பவும் அல்ப சக்தர்கள் என்ற அடக்கம் இருந்துவிட்டால் எல்லாம் ஸரியாய்விடும். நம் மனஸ் எதையும் நினைக்கிறது, நம் புத்தியானது பிரமிக்கும்படியான விஷயங்களைத் தெரிந்து கொள்கிறது என்கிறதில் தலை கனத்துப் போகக்கூடாது. புத்தி ப்ரகாசம் மனுஷ்ய ஜாதிக்கு நிறைய இருக்கலாம். ஆனால் புத்திக்கு மீறிய சக்திகளிடம் இந்த ஸாமர்த்தியத்தைக் காட்டி நாம் ஜயிக்க முடியாது. வேதப் பிரதிபாத்யமான, ஸாத்விகமான தெய்வ சக்திகள் மட்டுந்தானென்றில்லை. காத்து (காற்று), கருப்பு என்று அநேக ஆவி லோக சேஷ்டைகளைச் சொல்கிறார்களே, இதெல்லாம் நுழைய விடாமல் காப்பாற்றுகிற காத்தவராயன், கருப்பண்ணன் முதலானவற்றுக்குக்கூட நாம் அடங்கினவர்கள் என்பதால்தான், பிராம்மணர்கள் கூட பூசாரி பூஜை செய்யும் கிராம தேவதைகளுக்கும் வருஷத்தில் ஒரு நாளோ, தங்கள் வீட்டில் கல்யாணம், கார்த்திகை என்றாலோ வழிபாடு நடத்தும் வழக்கம் தொன்று தொட்டு ஏற்பட்டிருக்கிறது. ஸ்மிருதியிலேயே (தர்ம சாஸ்திரத்திலேயே) ரிஷிகள், "இங்கே (சாஸ்திரத்தில்) சொன்னதோடு எல்லாம் முடிந்துவிடவில்லை; பாக்கி பண்ண வேண்டியவைகளை ஸ்திரீகளிடமிருந்தும், நாலாம் வர்ணத்தவர்களிடமிருந்தும் தெரிந்து கொள்ளுங்கள்" என்று சொல்லியிருப்பது கிராம தேவதை வழிபாடும் சாஸ்திர ஸம்மதம் தான் என்பதற்கு ஆதரவாயிருக்கிறது. விஷயம் தெரியாதவர்கள் 'க்ரிடிஸைஸ்' செய்வதால் இதெல்லாம் ரொம்பத் தாழ்ந்த ஸ்திதிக்கு மதத்தை இறக்கி விடுகிறது என்று தப்பாக நினைத்து, விட்டுவிடக் கூடாது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
எமது புதிய கிளை நிறுவனம் : எண். 7, 30வது தெரு, தில்லைகங்கா நகர்,
நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 17 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்
நல்லாசியுடன்

சுவாமி ஸ்ரீ அம்பிகானந்தா

A.ராஜாபக்கிரிசாமி MSc., MEd.,

## அந்த நாள் ஞாபகம்

# "இது சதி வேலை!"

இதற்கிடையில் எங்களுக்குச் சொந்தமான வடபழனி பிரஸ் எனக்குப் பல அனுபவங்களைக் கொடுத்தது. 1968ம் ஆண்டு அக்டோபர் மூன்றாம் தேதி நான் வடபழனி பிரஸ்ஸுக்குப் போனபோது, அங்கே அதைப் பார்த்துக்கொள்ள யாரும் இல்லை. என் மைத்துனர் ஏ.வீரப்பன் சொந்தமாகப் படம் எடுக்க வேண்டும் என்று போய்விட்டார்.

'நீ கொஞ்சம் பிரஸ்ஸைப் பாத்துக்க' என்று என். மூத்த சகோதரர் முருகன் கேட்டுக் கொண்டார்.

நான் அப்போது புரொடக்ஷன் பி.ஆர்.ஓவாக இருந்தேன். மற்றபடி நிர்வாக அனுபவமெல்லாம் எனக்குக் கொஞ்சமும் இல்லை. பிரஸ்ஸைப் பார்த்துக் கொள்வது மிகவும் சிரமமாக இருந்தது.

தொழிலாளர் பிரச்னையின் காரணமாக பிரஸ்ஸை மூடி, பிறகு ஒரு மாதத்தில் மறுபடியும் ஆரம்பித்தோம். 1975ல் மறுபடியும் பிரச்னை தலை தூக்கியது. ஏதோ போய்க் கொண்டிருந்ததே தவிர, லாபம் பார்க்க முடியவில்லை. அந்த மாதிரி நிலையில் அச்சு இயந்திரங்களில் அடிக்கடி கோளாறுகள் ஏற்பட்டு வந்தன.

'மெஷின் நெம்பர் ஃபைவ் - குவார்ட்டர் டெமி' என்று ஒரு மெஷின் இருந்தது. அது டபுள் கலர் மெஷின். அதில் ஏற்பட்ட கோளாறைச் சரி செய்ய எழுபத்தாறாயிரம் ரூபாய் செலவானது. குரோவர் என்கிற ஒரு மெக்கானிக்தான் ரிப்பேர் பார்த்தார். ஆனால் அந்த ரிப்பேர் சரியாகவில்லை.

இரண்டு ஷிப்ட் என்று போட்டு மொத்தம் பத்துப் பேர் வேலை பார்த்து வந்தார்கள். ஷிப்டுக்கு ஐந்து பேர்.

'அடுத்து மெஷின்ல ரிப்பேர் வந்தா, நீங்க பத்துப் பேரும் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தால்தான் ரிப்பேருக்குப் பணம் கொடுப்பேன்' என்று தீர்மானமாகச் சொன்னேன்.

'ரிப்பேர் செய்ய வேண்டும்' என்று பத்துப் பேரிடமும் கையெழுத்து வாங்கி வந்து குரோவர் என்னிடம் பணம் வாங்கிக் கொண்டு போனார்.

அந்த மெஷின் சாதாரணமாக பதினெட்டாயிரம் பிரதிகள் அவுட்புட் கொடுக்க வேண்டும். ஆனால் பன்னிரண்டாயிரம் பிரதிகள் கூடத் தர முடியவில்லை.

''நீங்கள் எல்லாம் கையெழுத்து போட்டுத் தந்ததால்தான் ரிப்பேருக்குப் பணம் கொடுத்தேன். இப்படி இருந்தால்



• செட்டில்மெண்ட்டுக்குப் பிறகு எடுத்த குரூப் போட்டோ...

எப்படி?" என்று ஊழியர்களிடம் கோபமாகக் கேட்டேன்.

அதற்கு அடுத்த நாள், 'மெஷின் பிரேக் டவுன் ஆகிவிட்டது' என்று எனக்குத் தகவல் வந்தது.

உள்ளே நாற்பது, ஐம்பது பேப்பர்கள் மாட்டிக் கொண்டிருந்ததும் தெரிய வந்தது.

"இதோ பார்... நீ என்ன பண்ணுவியோ... ஏது பண்ணுவியோ தெரியாது... இந்தத் தடவை மொத்தமா ஐயாயிரம் ரூபாய் உங்கிட்ட கொடுத்துடுவேன். அதுக்கு மேல பைசா தர மாட்டேன். இந்த ஐயாயிரத்துக்குள்ளேயே ரிப்பேர் முடிஞ்சு போனாலும் நீ எனக்கு மீதி தர வேண்டியதில்லை. உடனே போய் ரிப்பேர் வேலையைப் பார்" என்றேன்.




"இதுவே வாடிக்கையாய்ப் போச்சு. ரிப்பேருக்குச் செலவு பண்றதே எனக்கு வேலையாய்ப் போச்சு. இதோ பார் குரோவர், இனிமே நான் ரிப்பேர்க்கென பணம் தருவதாக இல்லை" என்று கத்தினேன்.

கத்தி என்ன லாபம்? ரிப்பேர் செய்து தானே ஆக வேண்டும்!

## திரையுலக நினைவுகள்

பத்து, பதினைந்து நிமிடங்களில் குரோவர் திரும்பி வந்தார். அவர் கையில் ஸ்பிரிட் பாட்டில் போல ஒரு சிறிய பாட்டில் இருந்தது.

"ஸார்... மெஷினில் ஒரு பிளாக் இருந்தது. நான் 'ஏர் பிரஷர்' கொடுத்ததில் அந்த பிளாக் வெளியே வந்து விட்டது.

31

ஏவி.எம்.சரவணன்

நான் ஜஸ்ட் பிரஷர்தான் கொடுத்தேன். எனவே நீங்கள் இதற்குப் பணம் ஏதும் தர வேண்டாம்" என்றார் குரோவர்.

"ஏர் பிரஷர் தந்தால் பிளாக் சரியாகி விடும் என்று நீ செயல்பட்டது உன் புத்தி சாலித்தனம். நான் கொடுத்த வாக்குறுதியின்படி ஐயாயிரம் ரூபாய் கொடுத்து விடுவேன்."

"யு ஆர் டு குட் எ மேன் ஸார்" என்றார் குரோவர் சிரித்துக் கொண்டே. தொடர்ந்து, "இந்த பிளாக் எப்படி மெஷினுக்குள் வந்தது தெரியுமா? இது ஒரு கம் (Gum)" என்று தன் கையில் இருந்த பாட்டிலுக்குள் சுட்டிக் காட்டினார்.

"கம் எப்படி மெஷினுக்குள் போச்சு?" என்று கேட்டேன்.

"அதுதான் சதி வேலை" என்று குரோவர் சொன்னதும் நான் அதிர்ச்சியடைந்தேன். அந்தச் சதியை அவர் விளக்கினார்.

"மெஷினில் ஆயில் டாங்கில் இருந்துதான் மெஷின் முழுமைக்கும் தேவையான எண்ணெய் சீராகப் பரவிக் கொண்டிருக்கும். டாங்கில் கொஞ்சம் 'கம்'- சில சொட்டுகள் விட்டுவிட்டால் போதும் - ஆயிலோடு சேர்ந்து கம்மும் போய்க் கொண்டிருக்கும். மெஷின் ஓடிக் கொண்டிருக்கும் வரை எதுவும் தெரியாது. சிக்கல் இருக்காது. ஆனால் மெஷினை நிறுத்தும்போது, அந்த கம் உறைந்து போகும். பிறகு மெஷினை இயக்கும்போது கம் உறைந்து போன இடத்தில் வழக்கமான சுழற்சி இல்லாமல் ஓட்டம் சிக்கும். தடைப்படும். மெஷின் மிகப் பெரிய சேதத்துக்கு உள்ளாகும்."



இந்த விளக்கத்தைக் கேட்டதும் நான் உறைந்து போனேன்.

"இருபது வருடங்களுக்கு முன் தாம்ஸன் பிரஸ்ஸில் இப்படித்தான் நடந்தது. உடைத்து எடுக்கும் அளவுக்கு அது போனது. அது போல் ஒரு சதி. அதற்கப்புறம் இப்ப உங்க பிரஸ்லதான் நடந்திருக்கு."

"ஏன் இப்படிப் பண்ணினாங்க?" என்றேன்.

"ஸார்... நான் தெரிந்துகொண்ட வரையில் உங்க பிரஸ் தொழிலாளர்கள் 'செட்டில்மென்ட்' வாங்கிக்கொண்டு துபாய்க்குப் போகணும் என்று ஆசைப்படுகிறார்கள். அவர்களாகப் போனால் 'செட்டில்மென்ட்' தர மாட்டீர்கள் என்று தெரியும். அதனால் இப்படி 'சபடேஜ்' பண்ணி பிரச்னையை ஏற்படுத்தி வருகிறார்கள்."

நான் சற்றும் எதிர்பார்க்காத ஒரு கோணமாக குரோவரின் தகவல் இருந்தது.

"அதனால் பெட்டர் டு குளோஸ் த பிரஸ் அண்ட் செட்டில் தெம். அவங்க துபாய்க்கு வேற வேலைக்குப் போகிற மூடில் இருப்பதால் நீங்க 'செட்டில்மென்ட்' என்றால் தயாராக இருப்பார்கள்" என்றார் குரோவர்.

அன்று இரவு நான் ரொம்ப நேரம் யோசித்து விட்டு என் தந்தையிடம் போய் ஆலோசித்தேன். விவரமாக எல்லாவற்றையும் சொல்லி, "இப்படி இருக்கு அப்பச்சி... நம்மபுக் வேல்யுவுக்கும், பார்சேஸ் வேல்யுவுக்கும் பன்னிரண்டு லட்ச ரூபாய் வித்தியாசம் இருக்கு. இது நாள் வரைக்கும் அவங்க வேலை பார்த்ததற்கு எல்லாருக்கும் நாம காம்பன்சேஷன்

• பிரஸ்ஸில் தொழிலாளர்களுடன் வீரப்பன்...



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2005

படைப்பாளிகளுக்கும் வாசக எழுத்தாளர்களுக்கும்
மாபெரும் வாய்ப்பு!

முதல் பரிசு - ரூ. 10,000
இரண்டாம் பரிசு - ரூ. 7,500
மூன்றாம் பரிசு - ரூ. 5,000

பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.
விதிமுறைகள், மற்ற விவரங்களுக்கு சென்ற இதழ்
கல்கியைப் பாருங்கள். அல்லது அடுத்த இதழுக்குக் காத்திருங்கள்.

- ஆர்

கடைசி தேதி : **ஜூன் 15**


தரணும். அதுக்கு அஞ்சு லட்சம் வேணும். ஆனா அவங்க பேரம் பேசுவாங்க. எதுக்கும் நீங்க எனக்கு பன்னிரண்டு லட்ச ரூபாய் வரை பர்மிஷன் கொடுத்தா, ஒரு வழியா முடிக்கலாம்" என்றேன்.

என் தந்தை எப்போதுமே முடிவெடுக்க அதிக நேரம் எடுத்துக் கொள்ள மாட்டார்.

"சரிப்பா... செய்..." என்று ஒப்புக் கொண்டார்.

அடுத்த நாள் தொழிலாளர்களை அழைத்துப் பேசினேன். குரோவர் சொன்னது மாதிரியே அவர்களுக்கெல்லாம் மிகவும் சந்தோஷம்.

பேச்சுவார்த்தை தொடங்கி நடந்தது. முதலில் இரண்டு வாரத்தில் ஆரம்பித்து, மூன்று வாரம், இருபத்து மூன்று நாள் கணக்கு என்று அவர்கள் பாட்டுக்கு சொல்லிக் கொண்டே போனார்கள். ஒவ்வொரு பேரத்தின்போதும் 'எவ்வளவு செலவாகும்...' என்று கணக்குப் போட்டுக் கொண்டே வந்தேன். பன்னிரண்டு லட்ச ரூபாய் வரை பொறுத்துப் பார்த்தேன். அவர்கள் அப்புறமும் 'இன்னும் கொஞ்சம்' என்று ஆரம்பித்தார்கள்.

"இதுதான் மேக்ஸிமம். இனிமே தர முடியாது. பிரஸ் எப்படி நடக்குதோ அப்படி ஆகட்டும். எனக்குக் கவலையில்லை" என்று நான் உறுதியாக முடிவெடுத்ததும், அவர்கள் 'சரி' என்று ஒப்புக் கொண்டார்கள்.

சட்டப்படி என்னென்ன செய்ய வேண்டுமோ அந்த விதிமுறைகளைப் பின்பற்றி, மொத்த இழப்பீட்டுத் தொகையைக் கணக்கிட்டு, அப்போது லேபர் கமிஷனராக இருந்த செல்லத்துரை என்பவரை நேரில் பார்த்து 'குளோஸர் அக்ரிமெண்ட்' படிவத்தில் கையெழுத்திட்டோம்.

பிரச்னை தீர்ந்த மகிழ்ச்சி எங்களுக்கு. பணம் கிடைக்கும் மகிழ்ச்சி தொழிலாளர்களுக்கு.

"என்னுடைய அனுபவத்தில் இப்படியொரு சுமுகமான 'மூடல்' நடைபெற்றதில்லை. நிர்வாகமும், தொழிலாளர்களும் மகிழ்ச்சியாக இணைந்து ஒரு நிறுவனத்தை மூடுவது, இதுதான் என் அலுவலக வாழ்க்கை அனுபவத்தில் முதல் தடவை" என்றார் செல்லத்துரை.

செட்டில்மென்ட் முடிந்ததும் ஒரு குரூப் போட்டோ எடுத்துக் கொண்டோம். தேநீர் விருந்து ஏற்பாடு செய்திருந்தோம். போட்டோ காப்பி வந்ததும் அதில் ஒவ்வொருவர் பெயரையும் அச்சிட்டு, ஆளுக்கு ஒரு காப்பி எங்கள் செலவில் வழங்கினோம். இப்படியாக எங்கள் பிரஸ்ஸின் மூடுவிழா நடைபெற்றது.

*(வளரும்)*

# விமர்சனம்




சர்ச்சைக்குரிய கதைகளின் காட்ஃபாதர் என்றால் பாலசந்தர் என அடித்துச் சொன்னது ஒரு காலம். அவர் ஓய்வெடுத்துக் கொண்டிருப்பது அமுதே படக்குழுவுக்கு அல்வா சாப்பிட்ட மாதிரி ஆகிவிட்டது.

திருமணத்துக்குப் பிறகு ஒருவன் / ஒருத்தியின் வாழ்க்கையில் விடாப்பிடியாகக் காதல் தொடர்ந்தால் என்னவாகும் என்ற சிக்கலான, சர்ச்சையான கேள்விக்கு விடை தேடும் கதை!

மாண்புமிகு இந்தியப் பண்பாட்டின் படி, பழைய காதல் கடலளவு ஆழமென்றாலும், திருமணத்துக்குப் பிறகு அதை மறந்துவிட்டு, நம்பி கைப்பிடித்த துணையோடு வாழ்ந்துவிடுவதுதான் வழக்கம்.

அமுதே படத்தின் கதையில் அந்த பழைய பல்லவி இல்லாததால், கலாசார விரும்பிகளுக்கு பச்சை மிளகாயைக் கடித்த மாதிரி சுள்ளென்று உறைக்கக் கூடும். மேற்படி கதையின் சொந்தக்காரர் மணிமாலாவுக்கு 'லேடி பாலசந்தர்' என்ற பட்டத்தை பயப்படாமல் கொடுக்கலாம்.

தேவாலயத்தில் மணம் முடித்து வீடு திரும்பும் வழியில் கணவர் பிரகாஷ்ராஜுக்கு காதலனை துணிச்சலாக அறிமுகப் படுத்துவதில் தொடங்கி, தெளிவான சிந்தனையும், தீர்க்கமான முடிவும் எடுக்கும் தடாலடியான நான்ஸி கேரக்டரில் அசத்தும் மதுமிதாவுக்கு 'ஆந்திரப் புயல்...' விட்டுக் கொடுப்பது கூடக் காதல் தான் என்று மென்மையான முறைப்பெண் பாத்திரத்தில் அமைதியாகக் கலக்கும் உமாவுக்கு 'தமிழகத் தென்றல்' பட்டம்.

ஆச்சர்யம்! அலட்டல் இல்லாமல் 'தினகர்' கேரக்டரில் முதல் முறையாக நடித்திருக்கும் ஜெய்ஆகாஷுக்கு 'ஐடியல்மேன்' பட்டம், வசனகர்த்தா அன்பரசுக்கு 'வார்த்தைச் சுரங்கம்' என்ற பட்டத்தையும், அறிமுகப் பாடலாசிரியர் தமிழ்அமுதனுக்கு 'மழலை மணி' என்ற பட்டத்தையும் வழங்கலாம். இடைவெளிவிட்டு இயக்கத்தைத் தொடர்ந்தாலும், அழுத்தமாக 'உள்ளேன் ஐயா' சொல்லியிருக்கும் எழிலைப் 'புதுமை விரும்பி' என்று பாராட்டலாம்.

● அபவ் ஆவரெஜ்

நம்பர் ஒன் ஹீரோ, ஹீரோயின் கூட்டணி... அறிமுக நட்சத்திரங்களின் அணிவகுப்பு... இரண்டில் எதுவொன்றில் பிரகாஷ்ராஜ் நடித்தாலும் அந்தப் படத்தை நம்பிப் பார்க்கலாம். அவர் ஏற்றுக்கொண்டிருக்கும் பாத்திரம் வில்லனா இல்லை குணச்சித்திரமா என்பது பற்றியெல்லாம் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. ஏனென்றால் தமது கேரக்டர் மட்டுமல்ல, எல்லா கேரக்டர்களுக்கும் போதிய முக்கியத்துவம் உள்ள அழுத்தமான கதைகளைத் தேர்ந்தெடுப்பதில் அவருக்கு அப்படியொரு கவனம். அறிந்தும் அறியாமலும் அதற்கு விதிவிலக்கு அல்ல. சென்னையின் பிரபல தாதா பிரகாஷ்ராஜின் மகன் ஆர்யா. எதிர் முகாம் குண்டர்களோடு பொது இடத்தில் நடக்கும் கேங்வாரில் ஆர்யா எதிரிகளை துப்பாக்கியால் சுடுகிறான். குறி தவறி ஒரு குண்டு அங்கே வரும் நாயகி சமிக்ஷா காலில் பாய்ந்துவிட, அதற்கு ஐவிட்னஸ் நாயகன் நவ்தீப். பிரகாஷ்ராஜ் நவ்தீப்பைக் கூப்பிட்டு அன்பாக சமாதானம் பேசுகிறார்... அதன் பிறகு ஹீரோவுக்கும் வில்லனுக்கும் அடிதடி, தர்மம் இறுதியில் வெல்லும் என்ற வழக்கமான கதையை நீங்கள் எதிர்பார்த்தால் ஏமாந்து போவீர்கள்.

உண்மையில் ஐவிட்னஸ் நவ்தீப் தான் பிரகாஷ்ராஜின் மகன். ஆர்யா வளர்ப்புப் பிள்ளை. இதைக் கண்டு பிடித்ததும் பிரகாஷ்ராஜ் பாசத்தைக் கொட்டி உருக... ஆர்யா கொதித்து அரிவாளைத் தூக்குவார் என்று எதிர் பார்த்தால் அங்கேயும் அசத்துகிறார் இயக்குனர்.

என்கவுன்ட்டரில் ஒட்டுமொத்த குடும்பமும் காலியாகிவிடுமோ என்று பதைபதைத்துக் கொண்டிருக்கும்போது, கதையைச் சரியான பாதையில் நகர்த்தும் விஷ்ணுவர்த்தனின் இயக்கம், படத்துக்கு உயிர். நீரவ்ஷாவின் துடிப்பான ஒளிப்பதிவும், யுவன்சங்கரின் துள்ளலான இசையும் இளைய ரசிகர்களை உற்சாக வெள்ளத்தில் மூழ்கடிக்கும் எனர்ஜி பூஸ்டர்ஸ். அறிந்து போனாலும் அறியாமல் போனாலும் ஏமாற்றாத படம்.

- அபவ் ஆவரெஜ்

- விஷுவல்தாசன்





# சிரிப்பு

"ரமேஷ்... அப்பல்லாம் என் கண்களை மீன்கள்னு வர்ணிச்ச நீங்க, இப்ப திராட்சைப் பழங்கள்னு வர்ணிக்கறீங்களே... ஏன்?"

"நான் சைவத்துக்கு மாறிட்டேன் விமலா..."

- ஜே. தனலக்ஷ்மி

"ஆறிலும் சாவு... நூறிலும் சாவுங்கிறது சரியாப் போச்சுங்க...!"

"எப்படிச் சொல்றீங்க...?"

"ஆறாம் நம்பர் வார்டிலிருந்த என்னோட அப்பாவை, ஆபரேஷனுக்காக நூறாம் நம்பருக்கு மாத்தியிருக்காங்களே...!"

- புன்னகை மன்னன்





"அரசே... தங்களுக்கிருக்கும் அதே கண் பார்வை கோளாறு, நம் இளவரசருக்கும் இருக்கிறது என்று நினைக்கிறேன்!"

"எதை வைத்துச் சொல்கிறீர்?"

"அவரும் 'யாரங்கே' என்று கேட்கிறாரே!"

- எஸ். சக்தி குணசீலன்

# "சைவத்துக்கு



“நீ பிழைக்கத் தெரிஞ்ச ஆள்யா!”

“எப்படிச் சொல்றீங்க டாக்டர்?”

“ஆபரேஷன் வேண்டாம்... மருந்து மாத்திரையே போதும்ங்கிறியே!”

- எஸ். மோகன்



“மூணு மாசமா காதலிச்சுட்டு இப்ப திடீர்னு கை விரிக்கிறீங்களே... ஏன்?”

“நேத்துதான் கண் டாக்டர்கிட்ட போனேன்!”

- அம்பை தேவா

“நேத்து ராத்திரி கெட்ட கனவு கண்டேன் டார்லிங்!”

“என்ன கனவு டியர்?”

“உனக்கும் எனக்கும் கல்யாணம் நடந்துடுது!”

- கே. ஆனந்தன்



# மாறிட்டேன்!”

ஜெர்மன் புரட்சி

# சிக்கலில் இந்திய

அமெரிக்காவில் மேல்படிப்பு படிப்பதைவிட ஐரோப்பிய நாடுகளில் படிப்பதையே இந்திய மாணவர்கள் அதிகம் விரும்புவார்கள். காரணம், அங்கு இலவசக் கல்வி நடைமுறையில் இருப்பதுதான். ஆனால் இந்த வருடம் ஐரோப்பிய நாடுகளான ஜெர்மனி, பின்லாந்து போன்றவற்றில் கல்விக்குக் கட்டண முறையை அமல்படுத்தியுள்ளது அந்நாட்டு அரசு. இதனையொட்டி ஜெர்மனியில் நடைபெற்ற மாபெரும் மாணவர் போராட்டத்தை, அதன் சூடு குறையும் முன் டாகுமெண்டரி படமாக எடுத்துத் திரும்பியிருக்கும் கவிஞர் லீனா மணிமேகலை அந்த அனுபவங்களை நம்மிடம் பகிர்ந்து கொண்டார்...

"ஐரோப்பிய நாடுகளின் இ.யூ. ஃபெலோஷிப் அமைப்பு, இந்திய - ஐரோப்பிய நாடுகளின் வாழ்க்கை முறைகளில் ஏற்படும் முரண்பாடுகளை டாகுமெண்டரி படமாக எடுக்க அழைப்பு விடுக்க, அண்மையில் சென்றிருந்தேன். சமீப காலமாக ஜெர்மனியில் கொழுந்துவிட்டு எரியும் கட்டணக் கல்வி முறையையும், அவர்களது மாணவர் அமைப்புகளையும் இந்தியக் கல்விச் சூழலோடு, அதாவது ஐ.ஐ.டி - அரசுக் கல்லூரிகளின் வேறுபாடுகளோடு ஒப்பிட்டுப் படமாக எடுக்க அனுமதி கிடைத்தது. 'கனெக்டிங் லைன்ஸ்' என்கிற தலைப்பில் நானும் ஜெர்மனியைச் சேர்ந்த மைக்கேலா க்னாய்பர் என்பவரும் இயக்கினோம்.

தமிழ்நாட்டிலும் ஜெர்மனியிலும் தலா ஒரு வாரம் படப்பிடிப்பு நடத்தினோம். ஒரு ஐ.ஐ.டி மாணவனுக்கு, இந்திய

* லீனா



• படப்பிடிப்பின்போது...

அரசு மூன்றரை லட்சம் செலவு செய்கிறது. அவனோ அமெரிக்க எகானமியைப் பொறுத்துத்தான் தனது எதிர்காலம் அமையவிருப்பதாகக் கூறுகிறான். இன்னொரு பக்கம் சாதாரண குடும்பத்தில் பிறக்கும் மாணவன், அரசுக் கல்லூரியில் வேறு வழியின்றி படிக்கச் சென்று, தன்னை ஸ்டுடண்ட் யூனியன் போராட்டங்களில் ஈடுபடுத்திக் கொள்கிறான். இந்திய மாணவ சமூகத்திலுள்ள இந்த ஏற்றத்தாழ்வுகளை என் குறும்படத்தில் பதிவு செய்தேன்.

ஜெர்மனி நமக்கு நேரெதிர். அங்கு எல்லோருக்கும் 'சம கல்வி; சம வேலை வாய்ப்புகள். ஜாதி, மதத்தை கல்வியில் திணிப்பது கிடையாது. அனைத்துமே அரசு கல்வி நிறுவனங்கள்தான். சென்ற வருடம் வரைக்கும் எல்லோருக்கும் இல

# மாணவர்கள்!

வசக் கல்விதான்.

ஆனால், சமீபகாலமாக நம் ஐ.ஐ.டி ஸ்டைலில் ஜெர்மனியில் முளைத்துள்ள 'எலைட்' கல்வி நிறுவனங்கள்தான் ஜெர்மன் மாணவ சமுதாயத்துக்கு பெரும் தலைவலியை ஏற்படுத்தியிருக்கின்றன. ஜெர்மனியில் கல்விமுறை அவர்களது மொழியில்தான் கற்பிக்கப்படுகிறது. ஆனால், புதிதாக ஆரம்பிக்கப்பட்டிருக்கும் 'எலைட்' கல்வியில் அனைத்துமே ஆங்கிலம்தான்.

அமெரிக்கக் கனவில் மிதக்கும் மாணவர்கள்தான் இது போன்ற நிறுவனங்களில் சேருகிறார்கள். இத்தனை நாட்களாக இல்லாத ஏற்றத்தாழ்வு இதன்மூலம் உருவாவது தேவையா என்பது ஜெர்மன் மாணவர்களின் முதல் கேள்வி.

கட்டணக் கல்விக்கு அங்குள்ள உச்ச நீதிமன்றம் அனுமதி அளித்துவிட்டது. கிழக்கு ஜெர்மனியை மேற்கு ஜெர்மனி உயரத்திற்குக் கொண்டு வரவே இந்த ஏற்பாடு என்கிறது ஜெர்மானிய அரசு. பின்லாந்து நாட்டில் முதல் கட்டமாக வெளிநாட்டு மாணவர்களுக்குக் கட்டணத்தை அறிவித்திருக்கிறது அந்நாட்டு அரசு. இதெல்லாம் மாணவ சமூகத்தினரிடையே பெரும் எழுச்சியை ஏற்படுத்தியுள்ளது.

அங்கு பதினாறு வயதானால் அவர்களாகச் சுதந்திரப் பறவையாக மாறி, தனியாக வாழ ஆரம்பித்து விடுகிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு வருடத்துக்கு 500 யூரோ கல்விக் கட்டணம் செலுத்துவது பெரும் சுமையாக உள்ளது. 'அரசு தன் பட்ஜெட்டில் கல்விக்கான மானியத்தை அதிகரிக்க வேண்டும். அதை விட்டுவிட்டு எங்களிடமிருந்து பணம் பிடுங்கி 'எலைட்' கல்விக்குச் செலவழிக்கக் கூடாது' என்று யூனியன் அமைத்து தொடர்ந்து போராடி வருகின்றனர். இதனால் தற்பொழுது இலவசக் கல்வியைத் தேடி மேற்படிப்புக்கு ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்லும் இந்திய மாணவர்களின் தலையில் இடி விழுந்துள்ளது.

இதுபோன்று இந்திய - ஐரோப்பிய கல்வி முறைகளையும் அதன் முரண்பாடுகளையும் டாகுமெண்ட்ரியில் வெளிப்படுத்தியது அங்கு பெரும் வரவேற்பு பெற்றது. பல ஐரோப்பிய நாடுகளில் திரையிடப்பட்டு, விவாத கூட்டங்களும் நடைபெற்றன. இப்படத்தை விரைவில் தமிழ்நாட்டு மாணவர்கள் முன் திரையிட்டு அவர்களது கருத்துகளையும் அறிய ஆவலாக இருக்கிறேன்."

லீனா மணிமேகலை

- செந்தில்

படம் : ஸ்ரீஹரி

இந்த இடைத் தேர்தல் ரிசல்ட் அதிகமா பாதிச்சது பா.ம.கவைத்தான்னு ரொம்பப் பேரு பேசிக்கிட்டு திரியறாங்கப்பு... நெசமாவா இருக்கும்னு லேசுபாசா விசாரிச்சுட்டு வரலாம்னு, பா.ம.க.வோட பொங்கு தமிழ் வளர்ச்சி அலுவலகத்துக்கு ஒரு விசிட்டு... சாரி... ஒரு நடை போனோம்...

அன்னிக்கு டாக்டர் வர்றதா சொல்லியிருந்துருக்காக. அதனால கூட்டம் ஓரளவுக்கு இருந்துச்சு... பழனிச்சாமின்ற ஒரு தொண்டர் தன்னோட பேரப்புள்ளைக்கு, டாக்டர் கையால (வாயால) பேர் வச்சுக்கறதுக்காக குடும்பத்தோட கார் எடுத்துக்கிட்டு வந்திருந்தாரு. மனுஷன் ஒரு 'பளபளா' மோதிரம் போட்டிருந்தாரு. கிட்டப்போய் பார்த்தா அது ரெட்டை மோதிரமப்பு...! ஒரு விரல்ல அய்யா... இன்னொரு விரல்ல சின்னய்யா... அதாவது ஒரே மோதிரம்... ரெண்டு வளையம்!

ஏன்னு கேட்டா, "நாம எதுக்குங்க ஒண்ணா இருக்குற அப்பா - புள்ளையப் பிரிக்கணும். அதான்




• ஆஹா மோதிரம்!

# ஈயடிச்சான் காப்பி!

ரெண்டு பேரும் ஒண்ணா பக்கத்து பக்கத்துல இருக்கட்டுமேன்னு போட்டுக்கிட்டேன்''னு வெள்ளந்தியா சிரிச்சுட்டு நகர்ந்தாப்ல.

அப்படியே வெளில வந்தா, எதிர்த்தாப்புலா இருக்குற கட்டை சுவத்துல ஏழெட்டு பாட்டாளிங்க உக்காந்து, ரொம்ப சீரியஸா பேசிக்கிட்டு இருந்தாக... "சம்முவம்... இந்த பை எலக்ஷன்ல தோத்துப்புட்டதால நம்ம ஓட்டு அவ்ளோதான்னு பேச்சு கௌம்பியிருக்கு... எனக்கேகூட அதுல சந்தேகமிருக்கு... இதெல்லாம் சீக்கிரத்துல சரிக்கட்டியாக வேண்டிய விஷயம்... அய்யா கொஞ்ச நாளைக்கு தமிழு, பாதுகாப்பு எல்லாத்தையும் ஓரங்கட்டிப்புட்டு, ஊரு ஊருக்கு மீட்டிங் போடோணும்... அய்யாவே நேர்ல கலந்துக்கோணும். இல்லாங்காட்டி வர்ற எலக்ஷன்ல சேதாரம் கொஞ்சம் ஜாஸ்தி

யாத்தான் இருக்கும் போய்"னு ஒரு பாட்டாளி சொல்ல,

''அதெல்லாம் வாஸ்தவம் தான்... ஆனா அதுக்காக போன தடவை மாதிரி பாண்டிச்சேரியே கதின்னு அங்கனயே அய்யா போயிடப் போறாரு... பாண்டிச் சேரியெல்லாம் வர்றப்போ வரட்டும்னு இங்கயே அய்யா சுத்திச் சுத்தி வரணும்... இல்லன்னா உள்ளதும் போச்சுடா நொள்ளைக் கண்ணாங்கற கதை தான் நமக்கு"ன்னார் இன்னொரு பாட்டாளி.

தாகத்துக்கு வெளியில போயி ஒரு ஜில் மாம்பழ ஜூஸ் அடிச்சுட்டு திரும்ப வந்து உட்கார்ந்தா, அங்க பேச்சு ஜெகத்ரட்சகன் பக்கம் திரும்பி இருந் துச்சு...

"காப்பின்னா காப்பி, ஈயடிச்சான் காப்பி அடிக்கிறாங்கய்யா... நாம அய் யான்னு போட்டுக்கிட்டா, அவங்களும் தமிழ் அய்யான்னு போட்டுக்குவானுவ. நாம நிறுவனர் - தலைவர்னு ரெண்டு தலைவர் வச்சிருந்தா, அவிங்களும் அதேமாதிரி போட்டுக்கிறானுவ. இந்த லட்சணத்துல அவிங்க கட்சிக்குத் தலைவரே நம்மகிட்ட இருந்து கழண்டு போன வந்தவாசி துரைதான். இதைத்தான் புலியப் பாத்து பூனை சூடு போட்ட கதைன்றது"ன்னு ஜனநாயக முன்னேற்றக் கழகத்தை நடத்திட்டு வர்ற ஜெகத்ரட்சகனை அர்ச் சனை பண்ணிப் போட்டு மூச்சி ரைக்கக் கிளம்பினாரு ஒரு பாட் டாளி.

"ஆமா... அய்யா இங்கிலீஷ் போர்டை யெல்லாம் தார்பூசி அழிக்கக் கௌம் பிட்டாரே...''ன்னு பக்கத்துலருந்த தொண்டர்கிட்ட தூண்டில் போட, அவரு "ஆமா தம்பி... இப்பல்லாம் 'மெர்லின் ஜூஸ் சென்டர்', 'கிரிஸ்டல் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ்'னு டமில்ல கடைங் களுக்குப் பேர் வச் சிருக்காங்க. இதெல் லாம் தப்பு இல் லியா? அதான் அய்யா அதை மாத்தணும்னு சொல்லி போராட் டத்துல இறங்கிட் டாரு."

''அதெல்லாம் கிடக் கட்டும்... பொங்கு தமிழ் அலுவலகத்துக்கு எதிர்த்தாப்புல இருக்குற வீட்ல 'இங்கிலீஷ் சொல்லித் தரோம்'ங்கறதை இங்கிலீஷ்ல போர்டு எழுதி வச்சிருக்காங்க. தமிழ் மட்டுமே தெரிஞ்சவனுக்கு இது எப்படி புரியும்? இதையெல்லாம் மொதல்ல சரி பண்ணக்கூடாதா''ன்னு நான் கேட் கலீங்க... யாரும் உங்ககிட்ட கேட்டா பதில் ரெடி பண்ணி வச்சுக் கங்க... அம்புட்டுதான் சொல்ல முடி யும்.

- **ஒற்றன்**

படங்கள்: **ரிச்சர்ட்**

## மொழிபெயர்ப்புச் சிறுகதை

# காசு மாலை

பழங்காலத்துக் காசுமாலை. இருபத்தியொரு கால்காசுகள் கோத்தது. மனைவியின் கழுத்தில் இத்தனை நாள் தொங்கிக்கொண்டிருந்தது. கிணற்றில் கயிற்றை விட்டுத் தண்ணீர் இழுக்கும்போது, உள்ளே விழுந்து போயிற்று. அதல பாதாளமான, அகன்று விரிந்த பெரிய கிணறு. முந்நூறு வருஷத்துப் புழக்கமுள்ள கிணறு. குறிப்பாகச் சொல்லும்படியான படிகள் கிடையாது.

கிணற்றில் தெளிந்த நீர். உச்சிப் பொழுதில் அடியாழத்தில் மஞ்சள் ராசி போலக் காசுமாலை கிடப்பது நன்றாய்த் தெரிந்தது.

கணவர் மூக்குக் கண்ணாடி வழியாக தெளிவாய்ப் பார்த்தார். அவருடைய அம்மாவைத் திருமணம் செய்து கொள்ளும்போது, அப்பா அவள் கழுத்தில் மாட்டியது. எத்தனையோ வருஷங்களுக்கு முன்பு. இப்போது அதை எப்படி கிணற்றிலிருந்து எடுப்பது?



எப்போதுமே கிணற்றில் இறங்குகிற மகான் ஒருவன் ஊரில் உண்டு. என்ன, கொஞ்சம் திருட்டுப் பேர்வழி! காலையில் நாலு மணிக்கு விழித்துக் கொள்வான். நடப்பான். ஹோட்டல்களில் புகுந்து பலகாரங்களைத் திருடிச் சாப்பிடுவான். வயல்களில் இறங்கி வாழைக்குலை, தேங்காய், பலாப்பழம் திருடுவான். தாராளமாக அடி உதை வாங்கியதால் ஆள் இளைத்துக் களைத்து ஐயோ பாவமாகத் தெரிவான்.

அவனுக்கு ஆள் போயிற்று. வந்து பார்த்தான். காசமாலை நன்றாய் கண்ணுக்குத் தெரிந்தது. பார்த்துவிட்டுச் சொன்னான்.

"கிணறு பயங்கர ஆழம். இது மாதிரி ஒண்ணு இந்தப் பக்கத்திலே இல்லே. எக்கச்சக்கமான தாழ்வு. இறங்கறதும் ஏர்றதும் கஷ்டம். நெறயத் தண்ணி வேற! எடுத்துத் தர்றேன். இருவத்தஞ்சு ரூபா தரணும்."

போக்கற்ற பயல்! இருபத்தைந்து ரூபாய்க்கு கிணற்றில் இறங்கி காசமாலை எடுத்து வரத் தயாராம்!

கணவர் யோசித்தார்.

'ஆனால் நீரில் இறங்கினால் சிறுநீர் கழித்து விடுவான். அப்புறம் அந்தத் தண்ணீரைத்தான் குடிக்க வேண்டி வரும்.'

கணவர் ஒரு ரூபாயை அவனிடம் நீட்டினார்.

"போய் டீ குடி! தண்ணி கொஞ்சம் வத்தட்டும். அப்புறம் சொல்லி அனுப்பறேன்."

அவன் போய் விட்டான். அப்புறம் கணவருக்கு ஒரு சிறு சந்தேகம். 'ராத்திரியோட ராத்திரியா வந்து கிணத்திலே இறங்கி காசு மாலையை எடுத்துக் கொண்டு போய் விடுவானோ?

ஆனால் எப்படி இறங்குவான்?"

கணவர் மீசைக்கு டை அடித்துக் கொண்டிருக்கும் போது, முடியைக் கறுப்பாக்கிக் கொண்டிருந்த மனைவியிடம் சொன்னார்.

"அந்த ஆளுக்கு ஒரு ரூபா கொடுத்துப் போகச் சொல்லிட்டேன். கிணத்

**வைக்கம் முகம்மது பஷீர்**

திலே சிறுநீர் கழிச்சிடுவான். அப்புறமா அந்தத் தண்ணியைத்தான் குடிக்க வேண்டி வரும்."

மனைவி சுருக்கென்று திரும்பிப் பார்த்தாள்.

"அவன் ஊரைவிட்டுக் கௌம்பிட்டிருக்கான். பொண்டாட்டி பிள்ளைங்க அங்க தோட்டத்திலே இருக்காங்களாம். அங்கே அவனுக்கு வேலை கிடைக்குமாம். போகப் போறான். இனிமே யார் கெணத்திலே இறங்குவாங்க?"

கொஞ்ச நேரம் கழித்து கணவர் சொன்னார்...

"அடியே! நான் இறங்கறேன்..."

"அந்த அதல பாதாளத்திலேயா? வேண்டாம்!"

"போடீ! நீ பொறக்கறதுக்கு முன்னேயே எத்தனையோ கெணத்திலே இறங்கி இருக்கேன். தென்னை மரம் ஏறியிருக்கேன். உச்சிக் கொம்பிலே எத்தனையோ மரத்திலே கயித்தை வீசி எறிஞ்சு மாட்டிட்டு தொங்கிட்டே கை பிடிச்சு ஏறி இருக்கேன்."

"அதெல்லாம் அந்தக் காலம்!"

"இந்தக் காலத்தில் மட்டும் என்ன?"

பல் தேய்த்துக் குளித்து, டீ குடித்து ஒரு சிகரெட்டைப் புகைத்தபடி கணவர் கிணற்றடியில் நின்றார்.

மனைவியின் தங்கை, மனைவி, ஸ்கூல் ஃபைனல் படிக்கிற மகள், நர்ஸரி ஸ்கூலில் படிக்கிற மகன் எல்லோரும் கூட நின்றனர். மறைவாகப் போய் நன்கு சிறுநீர் கழித்துவிட்டு கால் கழுவி வந்த கணவர், மனைவியிடம் சொன்னார்:

"நீ போய் பசுவைக் கட்டற நீளமான கயிறு இருக்கே... அதை எடுத்து வா."

தமிழில்: வையவன்

மனைவி போனாள். மிகவும் நீளமான கயிறு கொண்டு வந்தாள். கணவர் அதன் ஒரு முனையை கிணற்றின் அருகேயுள்ள தென்னை மரத்தில் இறுகக் கட்டினார். மறுமுனையை கிணற்றுக்குள் வீசினார். அது நீரின் விளிம்பைத் தொட்டது.

கணவர் துண்டை எடுத்தார். மூக்குக் கண்ணாடியைத் துடைத்துக்கொண்டு கிணற்றின் கைப்பிடிச் சுவரில் ஏறினார்.

"கண்ணாடி தேவையா?" மனைவி கேட்டாள்.

"பாக்கணுமே! தேவைதான்."

கணவர் கயிற்றைப் பிடித்துக்கொண்டு மெதுவாகக் கிணற்றில் இறங்கினார். கால்களை உந்தி உந்தி, உறைகளின் மேல் வைத்தவாறு கயிற்றைப் பற்றியவாறு கீழே போனார். மெல்ல தண்ணீரில் இறங்கினார்.

ஆழம் எவ்வளவு இருக்குமென்று ஓர் யூகம் உண்டு. கால்களை மடக்கிக் கொண்டு மூழ்கிக் கீழே போனார். யூகம் பொய்த்து விட்டது. நினைத்ததைவிட இரட்டிப்பு ஆழம். மூச்சை அடக்கி மேலும் கீழே போனார். அடியைத் தொட முடியவில்லை.

மூச்சு முட்டியது. மேலும் கீழே தாழ்ந்து போனார். தலைக்குள்ளே மணி முழக்கம். சுவாசம் நின்று விடுமோ? மார்பு வெடிக்கிற மாதிரி இருந்தது. ஒருவாறு அடி தொட்டார். காசுமாலையைக் கையில் பற்றி எடுத்தார். உந்தி மேலெழும்பினார். நீரின் விளிம்பு வந்தது. கயிற்றைப் பிடித்துக் கொண்டார். மூச்சு திக்குமுக்காடி வந்தது. பயங்கரமாக மார்பு ஏறி, தாழ்ந்து ஏறியது.

காசுமாலையைப் பற்களால் கடித்துப் பிடித்தவாறு மேல் துண்டை இறுகப் பிழிந்து தலை துவட்டிக் கொண்டார்.

தலையை உயர்த்தி மேலே பார்த்து அதே திக்குமுக்காட்டத்தோடு சொன்னார்...

"பக்கெட்டை இறக்கி விடு."

பக்கெட் கீழே வந்தது. அதற்குள் காசு மாலை, மூக்குக் கண்ணாடி இரண்டையும் வைத்தார். பக்கெட் போயிற்று.

திகைப்பு. தளர்ச்சி. முற்றிலும் குழைந்து விட்ட நிலை. ஏறினால் கயிற்றில் பிடி விட்டுப் போகும்.

பயம் தலை உயர்த்தி எழுந்தது.

"நீ போய் நம்ம ஏணியை எடுத்து வா" கணவர் உத்தரவிட்டார்.

மரத்தினால் செய்த பெரிய ஏணி வந்தது. மெதுவாக அதை கிணற்றிற்குள் இறக்கினார்கள். ஏணி உள்ளே ஆழத்தின் அடி தொட்டு நின்றது. அதன் மேல்படிதான் நீர் விளிம்பிற்கு மேல் நின்றது.

ஏணியை கிணற்றின் உள் மூலைமேல் சார்த்திவிட்டு கயிற்றைப் பிடித்தவாறு அந்தப் படியின் மேல் கணவர் நின்றார்.

கால்கள் நடுங்கின. உடம்பெல்லாம் வலி. மூச்சு முட்டிற்று. திக்குமுக்காடியது. மேலே உயரத்தைப் பார்த்தார்.

ஒரு பெரிய குழாய்க்குள்ளே அடியிலே நிற்பது போலிருந்தது. வானம் வெகு தூரம். கைப்பிடிச் சுவற்றின் அருகே மனைவியின் தங்கை, மனைவி மகனும், மகனுடைய தலை மட்டும்தான் தெரிகின்றன.

முற்றிலும் பீதி. ஏறித் தப்பிக்க முடியாது. மேலே ஏறுவது சாத்தியமில்லை. மீட்சி இல்லை என்பதை மனசு ஏற்றுக் கொண்டது.

கார் வாங்கணும்னு ரொம்ப நாளா ஆசை. இந்த வாரம்தான் டார்க் ப்ளு கலர்ல இண்டிகோ மெரினா கார் வாங்கியிருக்கேன்...

நிமிடங்கள் நீங்கிச் செல்கின்றன. மணிகள் மெல்லக் கடந்து போகும். மாலை வரும். ராத்திரி வரும். ராத்திரியை எப்படி கிணற்றிலே கழிப்பது? கால்கள் விறைத்து தண்ணீரில்தான் விழவேண்டும்.

"அடியே! எனக்கு ஏற முடியலே. தளர்ந்துட்டேன்."

மனைவியும் மகனும் அலறினர். அதைக் கேட்டு மகன் அழத் தொடங்கினான், மனைவியின் தங்கையும் அழுதாள்.

யாரையாவது கூப்பிடலாமா? யாரைக் கூப்பிடுவது? அக்கம் பக்கத்தில் ஆட்கள் உண்டு. கூப்பிட்டால் வருவார்கள். ஆனால் எப்படி மேலே தூக்குவார்கள்? அவர்கள் வருவது வரை கயிற்றின் பிடியை விடாமல் தொங்க முடியுமா? நினைப்பே நடுக்கத்தைக் கூட்டிற்று. மரணம் மிக அருகில்தான். எப்போதுமே பீதி வளர்ந்துகொண்டு சென்றது. தொண்டை காய்ந்து விட்டது. குனிந்தார். ஒரு கையால் அள்ளி இரண்டு வாய் தண்ணீர் குடித்தார்.

ஓர் உண்மை தெளிவாய்ப் புலப்பட்டது.

'வயசாகிவிட்டது. கிழவனாகி விட்டோம். இனியும் இளைஞன் அல்ல. தெய்வமே! தப்பிக்கிற வழியைக் காட்

டித்தா.'

"ஒண்ணு இப்படிப் பிடிச்சு ஏறி வாங்க ளேன்" மனைவி அழுகைக் குரலோடு கத்தி னார்.

தெய்வமே! புத்தி ஏற்றுக்கொண்டது.

அப்புறம் நடந்தது எல்லாமே ஆலோசித்து நடக்கவில்லை. அவரே கயிற்றின் நுனியை ஏணிப் படியில் கட்டி னார். பிறகு இரு கைகளாலும் கயிற்றைப் பிடித்துக்கொண்டு உந்தி உந்தி மேலே ஏறி னார்.



• தீபா வெங்கட்

கிணற்றின் கைப்பிடிச்சுவரில் ஏறி தரை இறங்கினார். மனைவியையும் மக்களையும் முத்தமிட்டார். ஏணியை கிணற்றுக்கு வெளியே இழுத்து எடுத்தார். படபடப்புக்கு மத்தியில் ஒரு பெருமிதம்.

சில தினங்கள் கழித்து கணவரின் இடது கால் நடுவிரலில் ஒரு புண். கிணற்றில் இருந்து மேலே வரும்போது எங்கோ உராய்ந்த ரணம். வீங்கி விட்டது. வெடிப்பு மாதிரி தென்பட்டது. டாக்டரிடம் போனார்.

அவர் நன்றாக அழுத்தி கணவர் வேதனையால் துடிதுடிக்க, சீழ் எடுத்து அகற்றி மருந்து போட்டு மாத்திரை கொடுத்து எச்சரிக்கை விட்டு அனுப்பி னார்.

"நனைக்கக் கூடாது."

பத்துப் பதினாறு நாள் தண்ணீர் படா மல் விந்தி விந்தி நடந்து அன்றாடம் மருந்து போட்டு வந்தார். ரணம் பெரிதாயிற்று. பழுத்த மாதிரி தோற்றம்.

"சிறுநீர் கொண்டு வாங்க. சர்க்கரை இருக்கான்னு பார்க்கணும்" என்று கூறி விட்டார் டாக்டர்.

"டாக்டர், சர்க்கரை அதிகமா இருந் துட்டா?" கணவர் பீதியோடு கேட்டார்.

"தானியங்கள் சாப்பிடக் கூடாது. சாதம் சாப்பிடக் கூடாது. இனிப்பு நீக்கணும். டீ, காபியிலே சர்க்கரை சேர்க்கப்படாது. பழங்கள் எதுவும் உபயோகிக்கக் கூடாது. கொழுப்பு குறைக்கணும்."

அடுத்த நாள்.

ஒரு சிறிய பாட்டிலில் கணவரின் சிறு நீருடன் மனைவி அவருக்கு முன்னால் நடந்தாள். கழுத்திலே காசு மாலை மின்னிப் பளபளத்தது. ஆ! எவ்வளவு வரலாறுள்ள காசுமாலை.

"ரிசல்ட் நாளைக்கு."

பாட்டிலை வாங்கிக்கொண்டு அவர் களை அனுப்பி வைத்தார் கம்பவுண்டர்.

மறுநாள் மனைவி மட்டும் டாக்டரிடம் போய் வந்தாள்.

"ரிசல்ட் தெரிஞ்சது. நெறைய சக்கரை."

கணவர் மனம் மரித்துவிட்டது. உடல் மரிக்கத் தொடங்கியது.

கொஞ்ச நேரம் கழித்து மனைவி டீ கொண்டு வந்தாள். கணவர் அதை வெறுப்போடு பார்த்தார். வாங்கி முகம் சுளித்தவாறு பருகத் தொடங்கினார். நம்ப முடியவில்லை. நல்ல இனிப்பு. டாக்டர் சர்க்கரையே கூடாது என்று தடை போட் டாரே!

"ஏன் சர்க்கரை போட்டே?" கணவர் கோபமாய்க் கேட்டார்.

மனைவி சிரித்தாள்,

"சும்மா சொன்னேன். உங்களுக்குச் சக்கரை சுத்தமா இல்லே."

மகிழ்ச்சி பீறிட மனைவியைப் பார்த் தார். ஒரு சிறு நெருடல். அவள் கழுத்தில் காசுமாலை இல்லை. எங்கே போயிற்று? எழுந்து விறுவிறுவென்று கிணற்றருகே ஓடினார். எட்டிப் பார்த்தார். கிணற்றடியில் அதலபாதாளத்தில் நீரின் கீழே மஞ்சள் ராசிபோல காசுமாலை குஷியாக பளபள வென்று மின்னி ஜொலித்துக் கொண்டி ருந்தது. 

# ப்ரியா மணி

பாரதிராஜாவின் அறிமுகமான ப்ரியா மணி, பாலுமகேந்திராவின் 'அது ஒரு கனாக் காலம்' படத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார். இரண்டே படங்களில் தமிழ் சினிமா ரசிகர்களின் இதயங்களில் நுழைந்து விட்டவர், நமக்காக இங்கு இதயம் திறக்கிறார்.

**என் கனாக்காலம்:** பத்தாவது படிக்கும்போது எம்.டிவி, வி சேனல் பார்த்து வி.ஜே ஆகணும்னு புதுசா கனாக் கண்டேன். கல்லூரியில் படிக்கும்போது ஹோட்டல் மேனேஜ்மென்ட் மீது என் ஆசை பிறந்தது. அப்பப்போ என் கனவுகள் கலர் மாறிட்டே இருக்கும். இப்போ சத்தியமா நடிப்பு மீதுதான். இருந்தாலும் அப்பப்போ கண்ணாடி முன் நின்று எம்.டீவி காம்பியர்கள் மாதிரி பேசறதும், இமிடேட் செய்யறதும் என் பொழுதுபோக்கான விஷயம்.

**கொடுப்பினை:** என் முதல் படத்தோட தோல்வியை வெற்றியின் முதற் படிக்கட்டா நினைச்சுப்பேன். பாரதிராஜா அறிமுகம்ங்கிற கொடுப்பினையைத் தவிர, வேறெதையும் அந்தப் படத்துல நான் எதிர்பார்க்கலை. எல்லோருமே என்னை பயமுறுத்துன மாதிரி, பாரதிராஜா சார் செட்ல டெரர்தான். சரியா நடிக்காட்டி மறக்காம திட்டுவாரு.

**கதை கேளு கதை கேளு:** 'அது ஒரு கனாக்காலம்' யதார்த்தமான படம். நாலாவது படிக்கும் தனுஷும் ரெண்டாவது படிக்கும் நானும் நண்பர்களாக இருப்போம். இடையில் தாத்தா வீட்ல படிக்கப் போன தனுஷ், நீண்ட நாளைக்குப் பிறகு ஊர் திரும்புவார். அப்போ அவருக்கு 20 வயசு. எனக்கு 18. பழைய நினைவுகளைப் பேசியே காதல் அரும்பத் தொடங்குது. ஒரு சமயத்துல தனுஷோட அப்பா செய்த தவறால, அவரோட வாழ்க்கையே திசை மாறுது. க்ளைமாக்ஸ்? ப்பா... யாருமே எதிர்பார்க்க மாட்டீங்க.

**கோயில்:** பாலுமகேந்திரா

# "ஊரறியாத கஷ்டம்!"

மனீரத்னம் அந்தந்த கதாபாத்திரத்துக்கு நம்மைத் தயார் படுத்துவாரு. இதனாலேயே நானும் தனுஷ்ஷும் அதிக பட்சமா 2 டேக்குக்கு மேல போனதில்லை. இவர் ஷூட்டிங் நடக்கற இடம் எப்பவும் கோயில் மாதிரி அமைதியா இருக்கும். ஷாட்டின்போது தேவை யில்லாத ஆட்களை மட்டு மல்ல, நடிகர்களைக்கூட அருகில் வைத்துக்கொள்ள மாட்டார். இது மாதிரி எங்கேயும் பார்க்க முடியாது.



**ஊர் அறியாத கஷ்டம்:** நடிகைகளின் கஷ்டம் ஊர் அறியாதது. நம்மைப் பாடலுக்கும் காதல் காட்சிகளுக்கும் மட்டுமே பயன்படுத்துகிறார்களே என்கிற கவலை எல்லோரிடமும் உண்டு. படப்பிடிப்பில் வேறு மாதிரியான கவலைகள். அவுட்டோரில் ஷூட்டிங் நடக்கும்போது உடை மாற்ற படாதபாடுபட வேண்டியிருக்கும். இது போதாதென்று எங்களுக்கும் குடும்பம் இருக்கு, உணர்வுகள் இருக்கு என்பதைப் புரிந்து கொள்ளாமல், டெக்னாலஜி மூலமாக நடிகைகளின் புகைப்படங்களையும், வீடியோவையும் க்ராஃபிக்ஸ் செய்து அசிங்கப்படுத்தும் ப்ளாக்மெயிலர்கள் ஒழிக!

**திருப்புமுனை:** எங்க அப்பா குடும்பத்திலிருந்து யாரும் சினிமாவில் நுழைஞ்சதில்லை. அம்மா சைடிலிருந்து மால்குடி சுபா பாடகியாகியிருக்காங்க. பாரதிராஜா அலுவலகத்திலிருந்து எனக்கு அழைப்பு வந்தபோது, வீட்ல பெரிய விவாதமே நடந்தது. அப்போ என் பாட்டி, 'அவதான் ஆசைப்படறாளே. அனுப்பி வைங்க''ன்னு பச்சைக் கொடி காட்ட, அவங்க பேச்சை யாராலும் தட்ட முடியலை. நான் நட்சத்திரமாயிட்டேன். இன்னைக்கும் என்னை டீ.வியிலும், பத்திரிகைகளிலும் பார்த்து ஆனந்தக் கண்ணீர் விடுகிற ஒரே ஜீவன் பாட்டிதான்.

**- செந்தில்**

அட்டை மற்றும் படங்கள் :
**ஆண்டனி ஸ்ரீதர்**

♦ நாலணாவை என் மகன் வாயில் போட்டுக் கொண்டான். நல்ல வேளையாக உடனே கவனித்து விட்டதால் அதை அவனது வாயில் இருந்து எடுத்துவிட்டேன். அதை மட்டும் அவன் உள்ளே விழுங்கி இருந்தால்... நினைக்கவே பயமாக இருக்கிறது...

- ஆர்.சகுந்தலா,
சென்னை

**டாக்டர் ஜெயந்தி விஸ்வநாதன்:**
**(குழந்தைநல மருத்துவர்)**

சிறு குழந்தைகள் அருகே இதுபோன்ற பொருள்கள் அகப்படாதபடி கவனமாக இருக்க வேண்டும். வயிற்றுப் பகுதிக்குள் நாணயம் சென்றுவிட்டால் இரண்டு நாட்களில் அதுவே வெளியில் வந்து விடும். ஆனால் நாணயத்தை விழுங்கியவுடன் மூச்சு விடுவதில் ஏதாவது சிரமம் ஏற்படுகிறதா என்பதை கவனியுங்கள். அப்படி சிரமம் ஏற்பட்டால், மூச்சுப் பாதையில் அந்த நாணயம் அடைத்துக் கொண்டிருக்கிறது என்று அர்த்தம். முதுகில் நாலு தட்டு தட்டுங்கள். இன்னும் ஒரு வயது கூட நிரம்பாத குழந்தை என்றால், உட்கார்ந்து கொண்டு மடியில் குழந்தையை தலைகீழாக குப்புற விட்டுக் கொண்டு, ஒரு கையால் அதன் வயிற்றைத் தாங்கியபடி மறுகையால் அதன் முதுகைத் தட்டினால் நாணயம் வெளியே வர வாய்ப்பு உண்டு.

ஆணி, ஊக்கு போன்றவற்றை விழுங்கி இருந்தால், உடனடியாக மருத்துவமனைக்குச் செல்லுங்கள். எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தால்தான் நிலைமை விளங்கும். காது அல்லது மூக்கில் பட்டாணி போன்ற பொருள்கள் அடைத்துக் கொண்டால் நீங்களாக எடுக்க முயற்சிக்க வேண்டாம். அது இன்னும் உள்ளே சென்றுவிட வாய்ப்பு உண்டு. டாக்டரை அணுகுவதுதான் நல்லது.

♦ என் மகளுக்கு பதினான்கு வயது. என்றாலும் இன்னும் பூப்படைய வில்லை. இது கவலைப்பட வேண்டிய விஷயமா? அல்லது தானாக நடந்து விடும் என்று சாதாரணமாக இருந்து விடலாமா? அப்படியானால் எந்த வயதுவரை நான் பொறுத்திருக்கலாம்?

- மஞ்சு ராமனாதன்,
மதுரை

**டாக்டர் அனிதா பார்த்தசாரதி:**
**(மகப்பேறு மருத்துவர்)**

பூப்படைவதற்கு ஒரு சில வருடங்களுக்கு முன்பே பெண்களின் உடலில் சில மாறுதல்கள் தெரியத் தொடங்கி விடும். உயரம், எடை அதிகமாகும். மார்பகங்களில் வளர்ச்சி தோன்றும். அக்குளில் முடி வளரும். இந்த மாறுதல்களை எல்லாம் வீட்டில் உள்ள பெரியவர்களால் சுலபத்தில் கண்டுபிடித்துவிட முடியும். இவற்றை 'செகண்டரி செக்சுவல் கேரக்டர்ஸ்' என்று கூறுவோம். பதினான்கு வயது நிறைந்தும் உங்கள் மகள் பூப்படையவில்லை என்பது கவலைப்பட வேண்டிய ஒன்றல்ல. ஆனால் மேலே உள்ள மாறுதல்கள் உள்ளனவா என்பதை உறுதி செய்து கொள்ளுங்கள். அப்படி எதுவும் இல்லாமல் சின்னக் குழந்தையைப் போலவே உங்கள் மகன் இருக்கிறான் என்றால் டாக்டரிடம் காட்டுங்கள்.

# பூப்படைவதில்

♦ என் கணவர் கோபம் வரும்போது மிகவும் கத்தி ஆர்ப்பாட்டம் செய்து

விட்டு பிறகே ஓய்வார். அந்த சமயத்தில் நானும் வாதம் செய்தால் நிலைமை மோசமாகிவிடும் என்பதால் மௌனமாகி விடுவேன். கோபம் தணிந்த பிறகு தன் தவறை உணர்ந்து கொண்டு சமாளிப்பார். என் கவலை இதுதான்... அவர் கத்தும் போது என் உணர்வுகளை மிகவும் கஷ்டப்பட்டு அடக்கிக் கொள்வதே வருங் காலத்தில் ஏதாவது மன நோயில் கொண்டு விடுமோ?

- சுப்ரஜா,
புதுக்கோட்டை

டாக்டர் ஜெயந்தினி:
(மனநல மருத்துவர்)

உங்களுக்குத் திருமணமாகி



# தாமதம் ஏன்?

எவ்வளவு வருடங்கள் ஆனது என்று தெரியவில்லை. பல வருடங்களாக இப்படி நடக்கிறது என்றால், உங்கள் மனம் இந்தச் சூழலை எதிர்கொள்ள பக்குவப்பட்டு விட்டது என்று அர்த்தம். மனநோய் வர வாய்ப்பில்லை. ஆனால் திருமணமாகி ஐந்தாறு வருடங்கள்கூட ஆகவில்லை எனும் நிலையில், சிறிய விஷயங்களுக்குக் கூட உங்கள் கணவர் கத்த (இதை 'புவர் இம்பல்ஸ் கண்ட்ரோல்' என்போம்), உங்கள் மனநிலை பாதிக்கப் பட வாய்ப்புண்டு. ஆனால், இதை மனநோய் என்று கூற முடியாது. எப்போது ரகளை ஆகுமோ என்று எதிர்பார்த்து மன அழுத்தம் இதனால் கூடலாம். ஒரு காலகட்டத்தில் மன அழுத்தம் தாங்காமல் நீங்களும் பதிலுக்குக் கத்தக் கூடும். எனவே உங்கள் கணவர் சமாதானமாக நல்ல மூடில் இருக்கும்போது 'எனக்கு உங்களைப் பற்றித் தெரியும். ஆனால் இதே நிலை தொடர்ந்தால் அது நாளைக்கு என்னை யும் நம் குடும்பத்தையும் பாதிக்கக்கூடும். எனவே நம் குடும்ப டாக்டரை அணுகி உங்கள் உடனடி கோப வெளிப்பாடுக் கான காரணத்தை அறிந்து கொள்ளுங் கள்' என்று கூறி சம்மதிக்க வைத்தால் நல்லது.

தொகுப்பு :
**ஜி.எஸ்.எஸ்**

பெண்களுக்கான மருத்துவப் பகுதி



# போட்டுத் தாக்கு!

**விஜய டி.ராஜேந்தரிடம் கேட்கக் கூடாத பத்துக் கேள்விகள்...**

1. தேசிய காடு வளர்ப்புத் திட்டத்துக்கு நாலு யோசனை சொல்லுங்களேன்...
2. அழுகைல வெளுத்து வாங்கறீங்களே... மெகா சீரியல் எடுக்குற ஐடியா இருக்கா?
3. ஹீரோயின் நிழலைக்கூட நீங்க தொடமாட்டீங்க... ஆனா உங்க பையன்...?
4. சுப்ரபாதத்துக்கு பதில் 'அம்மாவும் நீயே... அப்பாவும் நீயே...' பாட்டுதான் தினமும் காலையில உங்க வீட்ல ஒலிக்குதாமே...?
5. நாளுக்கு நாள் சூரியனோட வெப்பம் அதிகமாயிட்டே போகுதே... எப்படி சமாளிக்கிறீங்க?
6. கடுகு, மலை கூட மோதறதைப் பத்தி என்ன நினைக்கறீங்க?
7. விஜய டி.ராஜேந்தர்ங்கற உங்க பேரை ஜெய டி.ராஜேந்தர்னு மாத்திக்கப் போறீங்களாமே... உண்மையா?
8. உங்க அடுத்த படமான வீராசாமிக்கு ஃபைனான்ஸ் பண்றது ஆற்காடு வீராசாமியா?
9. அடுக்குமொழி வசனம் பேச டிரெயினிங் எடுத்தது யார்கிட்ட... கலைஞர்கிட்டயா?
10. உங்க பசங்களுக்கு நீங்க டாடியா இல்ல தாடியா?"

பரமு



# விருந்துச் சாப்பாடும் மருத்துவ உணவும்!

ஈச்வரி ஜெகதீச்வரி



## முன்னின்று காக்கும் மூங்கிலணை காமாக்ஷி!




புத்தகங்கள்

# மங்கையர் மலர்

ஜூன் 2005 உணவுச் சிறப்பிதழ்

# அமரர் கல்கி

# ஆறாவது குழந்தை

ஒரு மனைவி இறந்த பின், இரண்டாந்தரம் கல்யாணம் செய்துகொள்வோர் பலர், 'எத்தனை நாள் ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டு திண்டாடுவது?' என்று கூசாமல் சொல்வார்கள். நாற்பது நாற்பத்தைந்து வயதுக்கு மேல் ஆன பிறகும், பன்னிரண்டு பதின்மூன்று வயதுப் பெண்களை இரண்டாந் தாரமாக மணப்பவர்கள் நம் நாட்டில் எத்தனையோ பேர். இத்தகைய இரண்டாந் தாரக்காரர்களைப் பரிகாசம் செய்யும் கதை ஒன்று உண்டு.

மூன்று மனிதர்களுடைய ஆவிகள் ஒரே சமயத்தில் யமனுடைய சந்நிதானத்தை அடைந்தன. முதல் ஆவி பூலோகத்தில் பிரம்மச்சாரியாகவே இருந்து இறந்தவனுடையது. அவனைப் பற்றிய விவரத்தை சித்திர குப்தன் அறிவித்ததும், யமன், "இவன் பூலோகத்திலே கஷ்டம் அனுபவியாதவன்; ஆகையால் இவனை இங்கே நரகத்தில் போடு" என்றான். அடுத்த ஆவி ஒரு கிரஹஸ்தனுடையது. "ஐயோ, பாவம்! உலகத்திலே கல்யாணம் செய்துகொண்டு வெகு கஷ்டப்பட்டிருக்கிறான். இங்கேயாவது சுகமாயிருக்கட்டும், சொர்க்கத்திற்கு அனுப்பு" என்றான் யமன். இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த மூன்றாவது ஆவி, "யமதர்ம ராஜனே! நான் பூலோகத்தில் இரண்டு தடவை கல்யாணம் செய்து கொண்டு ரொம்பக் கஷ்டங்களை அனுபவித்தவன்" என்று முறையிட்டது. உடனே யமன் வெகு கோபத்துடன், "அடே முட்டாள்! ஒரு தடவை கல்யாணம் செய்து கொண்டு கஷ்டப்பட்ட பின், இரண்டாம் தடவையும் கல்யாணம் செய்து கொண்டாயா? இப்படிப்பட்ட மூடனுக்குச் சொர்க்கத்தில் இடம் ஏது? போடு இவனைக் கொடிய நரகத்தில்!" என்று கட்டளையிட்டான்.



ஆனால் இந்தக் கதை, பரிகாசம் ஒன்றுக்கும் இரண்டாந்தாரக்காரர்கள் பயப்படுவதில்லை. "என்ன செய்கிறது ஸார்! வீட்டிலே சமையலுக்கு ஒருத்தருமில்லை. எத்தனை நாள் சாப்பாட்டுக்குத் திண்டாடுகிறது?" என்று கூசாமல் பதில் சொல்வார்கள். மூத்த தாரத்தின் குழந்தைகள் இருந்தால் அவர்கள் மேல் பழியைப் போடுவார்கள்.

இதற்கு விதிவிலக்காக நடந்து கொண்ட ஒருவரை எனக்குத் தெரியும். அவர் நல்ல வருமானமுள்ள பெரிய பதவியில் இருந்தவர். அவருக்குச் சுமார் நாற்பது வயதானபோது அவருடைய மனைவியார் ஐந்து குழந்தைகளை விட்டுவிட்டுக் காலஞ்சென்றார். உடனே அவருடைய இஷ்டமித்திரர்கள் அவருடைய கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்யத் தொடங்கினார்கள். அவர் அதை ஆட்சேபித்த போது, "ஐந்து குழந்தைகள் உனக்கு இருக்கின்றனவே! அவற்றை யார் பார்த்துக் கொள்வது?" என்று கேட்டார்கள். "ஆனால் ஐந்து குழந்தை போதாதென்று ஆறாவது குழந்தை ஒன்றையும் என் கழுத்தில் கட்டவல்லவா பார்க்கிறீர்கள்?" என்று மேற்படி பிரமுகர் பதில் சொல்லவே,



அவர்கள் வாயை மூடிக்கொள்ள வேண்டியதாயிற்று.

இவரைப் போல் நடந்து கொள்கிறவர்கள் நம் தேசத்தில் ஆயிரத்தில் ஒருவர்தான். முதல் மனைவி இறந்த ஒரு மாதத்திற்குள்ளாக இரண்டாவது கல்யாணம் செய்து கொண்டவர்கள் சிலரை எனக்குத் தெரியும். இதற்குச் சமூகத்தடையோ, சாஸ்திரத் தடையோ அணுவளவும் கிடையாது. ஆனால், இதே விஷயத்தில் மனைவியின் நிலை எப்படி இருக்கிறது? கழுத்தில் தாலி ஏறி விட்டால் தீர்ந்தது. எட்டு வயதில் ஒரு பெண் விதவையானாலும், ஆயுள் பரியந்தம் அவள் விதவைதான். தனக்கு அறிவு வருவதற்கு முன்பே இறந்து போன, முகம் கூட ஞாபகம் இராத புருஷனை நினைத்து அவள் விரதம் இருக்க வேண்டும்!

இது விஷயத்தில் புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் ஒத்த உரிமைகள் வேண்டுமென்றே நான் கருதுகிறேன். சாதாரணமாய், ஒரு தடவை இல்வாழ்க்கை சுகத்தை அனுபவித்தவர்கள், அத்துடன் திருப்தியடைந்திருப்பது தான் நல்லது. முக்கியமாக, குழந்தைகள் இருந்தால், புருஷனாகட்டும் ஸ்திரீயாகட்டும், அவர்களைப் பேணி வளர்ப்பதையே இலட்சியமாகக் கொண்டு, மறு விவாகத்தைப் பற்றி நினையாமலிருப்பதுதான் உசிதம். ஆனால், மிகவும் பால்யத்தில் புருஷனையோ மனைவியையோ இழப்பவர்கள், புனர் விவாகம் செய்துகொள்ள உரிமை இருக்க வேண்டும். வயதானவர்களும் காதல் ததும்பிப் போய்க் கல்யாணம் செய்து கொள்வதாய் இருந்தால், செய்து கொள்ளட்டும். ஆனால், வீட்டில் சமையலுக்கு ஆள் இல்லை என்று வயதான புருஷர்கள் இளம் பெண்களைக் கல்யாணம் செய்து கொள்வதைக் கட்டாயம் தடுக்க வேண்டும். அப்படிப்பட்டவர்கள் சமையல் பரீட்சையில் தேறிய பரிசாரகர்களைக் கல்யாணம் செய்துகொள்வது உசிதமே தவிர, இளம் குழந்தைகளின் வாழ்க்கையைப் பாழ் செய்வது மகா பாதகம்.

- ஆனந்தவிகடன், 16.2.1936.
(கல்கி களஞ்சியம் -
வானதி பதிப்பகம்)

பின்கதைச் சுருக்கம்

# மகனைக் கொல்ல மனைவியிடம் சம்மதம் கேட்ட தந்தை!

அந்த மனிதரை நான் முதன் முதலில் சந்தித்தபோது, இத்தனை உற்சாகம் ஒருவருக்கு சாத்தியமா என்று முதலில் ஆச்சர்யமாகத்தான் இருந்தது. முகம் முழுவதும் சிரிப்பு. பேச்சில் கொப்பளிக்கும் கிராமிய வாசனை. ஓர் இடத்தில் தரிக்காமல் அலைபாய்ந்துகொண்டே இருந்தார். பார்த்த மாத்திரத்திலேயே நூறு வருடங்கள் பழகியவர் மாதிரியான உணர்வை மிகச் சுலபமாக ஏற்படுத்திவிட்டார்.

அவரை அதற்கு முன் எனக்குத் தெரியாது. ஒரு பிரபல பத்திரிகை நடத்திய நாவல் போட்டியில் முதல் பரிசு வாங்கி அமெரிக்காவுக்கோ, சிங்கப்பூருக்கோ போய் வந்தவர் என்பதும், அவரது நாவல் மிகத் தரமாக இருந்த காரணத்தாலேயே, அந்தப் பத்திரிகை அதைத் தொடராக வெளியிடத் தயங்கியது என்பதும் மட்டும்தான் அவரைப் பற்றி நானறிந்த தகவல்கள். அந்த நாவலைக்கூட அப்போது நான் படித்திருக்கவில்லை.

முதல் சந்திப்பில், அந்த நாவலின் பிரதி கைவசம் இருக்கிறதா என்றுதான் முதலில் கேட்டேன். 'இருக்குண்ணே. நாளைக்கு வரும்போது கொண்டு வரேன்' என்றார். அன்றைக்குத்தான் அவர் கல்கியில் நிருபராகப் பணியில் சேர்ந்திருந்தார். நான் அப்போது அங்கே துணையாசிரியர்.

மறுநாள் அவர் அலுவலகம் வந்தபோது, மறக்காமல் நாவலைக் கொண்டு வந்திருந்தார். நுண்வெளிக் கிரணங்கள். அட்டையில் ஒரு மாதிரியும் உள்ளே 'நுண்வெளிக் கிரகணங்கள்' என்றும் அச்சாகியிருந்தது. எது சரியான தலைப்பு என்று கேட்டேன். 'கிரணங்கள்'தான் சரி என்று சொன்னார்.

• சு. வேணுகோபால்



ஓரிரு நாட்களில் அதைப் படிக்க ஆரம்பித்தேன். அந்தத் தமிழே எனக்கு மிகவும் புதிதாக இருந்தது. வட்டார வழக்கு நாவல் என்று பொதுப்படுத்திச் சொல்லிவிட முடியாது. இடையில் செய்யப்பட வேண்டிய மெய்ப்புத் திருத்துவது, எடிட் செய்வது போன்ற எந்தப் பணிகளும் அந்தப் பிரதியில் நிகழவில்லை என்பது புரிந்தது. பல இடங்களில் பிழைகள் மிகவும் கோபம் வர வழைத்தன. தூக்கிப் போட்டுவிடலாம் என்றுகூடத் தோன்றியது. ஆனால் அதையெல்லாம் மீறி நாவல் தன்னளவில் ஒரு சாதனை நிகழ்த்தியிருந்தது. முதலாவது, அந்த மொழி. அடுத்தது அந்த வாழ்க்கை.

முகலாயப் படையெடுப்பு சமயத்தில் கர்நாடகத்திலிருந்து உயிர் பிழைத்துத் தமிழகத்துக்கு ஓடி வந்த காமுகுல ஒக்கலிகர் என்கிற ஒரு சிறுபான்மை சமூகத்தினரின் கதை அது. மதுரை மாவட்டத்துக்கு வந்து சேரும் அவர்கள் ஓரிடத்தைத் தேர்ந்தெடுத்து, கோட்டை மாதிரி ஒரு பெரிய வீடு கட்டி வாழத் தொடங்குகிறார்கள். அந்தக் குடும்பத்தின் மூன்று தலைமுறைகளின் கதையைச் சொல்லும் பாவனையில், மானுட குலத்தின் மீட்சிக்கான வேட்கையையும், முன்னோர் சாபங்களின் வலுவையும் அது பொய்த்துப் போகும் காலம் வரை நகர்ந்து வந்து விவரிக்கும் கதை அது.

மேலோட்டமான பார்



வைக்கு மிகவும் யதார்த்தமான தளத்தில் நடக்கும் கதை போல் தெரிந்தாலும், நாவலில் மாயா ஜாலங்கள் மிக அதிகம். மதிப்பீடுகள் காலம்தோறும் மாறுவதை மிக எளிமையாகச் சில மேஜிக்கல் அம்சங்களைச் சேர்த்து சொல்லிக்கொண்டே போய்விடுவார்.

எளிய, மிக எளிய ஒரு கொலைக் குற்றச்சாட்டிலிருந்து வேகம் பிடிக்கும் நாவல். தான் தப்பிப்பதற்காகத் தன் சொந்த மகளையே கொலை செய்து எதிரிகள் மேல் பழி போடும் தந்தை. முதல் வாசிப்பில் அதிர்ச்சியளிப்பது நிச்சயம். ஆனால் காலம் காலமாக இருந்து வரும் சமூக வழக்கங்கள், மூட நம்பிக்கைகள், உறவுகளின் இறுக்கத்துக்குள் இருக்கும் கண்ணுக்குப் புலப்படாத சில நெகிழ்வுகள் - யோசித்துப் பாருங்கள்... மகளைக் கொல்வதற்கு மனைவியிடம் சம்மதம் கேட்கும் கணவனை நினைத்துப் பார்க்க முடியுமா நம்மால்? அந்தத் தாய்தான் சம்மதிப்பாளா?

இந்த மதிப்பீடுகள் எல்லாமே மாறிவிடுபவை. அந்த மாற்றம் சொல்லிக் கொள்ளாமல் வாழ்க்கையின் ஊடே புகுந்து நிறைந்துவிடுவது. மாறிக் கொண்டிருக்கும் வரைதானே மானுட வாழ்க்கை?

சு. வேணுகோபாலின் நுண்வெளிக் கிரணங்கள் நாவலின் கதையை, ஒரு வரியில் அல்

# 8

## பா.ராகவன்




• ப்ரியா மகாலட்சுமி

லது ஒரு பத்தியில் சொல்லுவ தென்பது இயலாத காரியம். கிராமிய வாழ்வின் அசலான வாசனையை எழுத்தில் கொண்டு வந்த எத்தனையோ படைப்புகள் தமிழில் உண்டு. ஆனால் வாசனையை மட்டுமல்லாமல் வாழ்வின் இசையையும் எழுத்தாக்கியவர் வேணுகோபால். நுண்வெளிக் கிரணங்கள் நாவல் முழுவதும் நம் காதுகளில் ஒலிக்கும் உருமிச் சத்தம். கிராம வாழ்வின் குறியீடு மட்டுமல்ல, மானுட வாழ்வின் ஒட்டலயத் தைக் கைப்பற்றிக் காதுகளுக்குள் இசை வடிவில் ஒலிபரப்பும் ஒரு எழுத்து ஆச் சர்யம்.

மிகச் சீக்கிரமே வேணுகோபால் என் நெருங்கிய நண்பராகிவிட்டார். ஐந்து மணிக்கு அலுவலகம் முடிந்ததும், காலாற நடந்து அசோக்நகர் உதயம் தியேட்டர் வாசல்படிகளில் போய் அமர்ந்து மணிக் கணக்கில் இலக்கியம் பேசிக் கொண் டிருப்போம்.

நுண்வெளிக் கிரணங்கள் அவரது முன்னோர்களின் வாழ்க்கை. காலம் காலமாகச் செவி வழியாக வந்து, அவரது மனத்துக்குள் உட்கார்ந்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்த வாழ்க்கை.

ஒரு சமயம் சொன்னார்: ''நம்ம வம்சத்தோட சரித்திரத்த கம்ப்ளீட்டா தெரிஞ்சி வெச்சிக்கறது ரொம்ப நல் லதுண்ணே.''

எதற்கு என்று கேட்டேன்.

''வந்தவழி தெரிஞ்சாத்தானேண்ணே போற வழிய சரியா தீர்மானிக்க முடி யும்?''

அதுதான் வேணுகோபால். சுமார் ஒன்று அல்லது இரண்டு மாத காலம் இடை விடாமல் எழுதி அந்த நாவலை முடித்த தாகச் சொன்னார். நாவல் பரிசு பெற்று, பிரசுரம் மறுக்கப்பட்டது பற்றிக் கேட்ட போது, "அதெல்லாம் பரவால்லண்ணே. எழுத நெனச்சத சரியா எழுதியாச்சு. அது போதுண்ணே" என்றார்.

ஒருநாள் மாலை, வேணுகோபாலின் முகம் வழக்கத்துக்கு மாறாக மிகவும் தீவிரமாக இருந்தது. விசாரித்தேன்.

''ஒரு விஷயம்ணே... நான் நாளைலேருந்து வேலைய விட்டுடலாம்னு இருக்கேன்ணே'' என்றார்.

அதிர்ச்சியுடன் ''ஏன்?'' என்று கேட்டேன்.

"ஒரு யோசனை வந்திருக் குண்ணே, எழுதினா பிர மாதமான நாவலா வரும்..."

''சரி. அதற்கு எதற்கு வேலையை விட வேண்டும்?''

"ரெண்டு விஷயத்துல மனச வெச்சிக் கிட்டிருந்தா ரெண்டுமே கெட்டுடும்ணே" என்றார்.

நான் ஒரு சில நிமிடங்கள் அவரது மனத்தை மாற்ற முயற்சி செய்து பார்த் தேன். அவர் தீர்மானத்துடன்தான் இருந் திருக்க வேண்டும்.

சொன்னபடியே வேலையை ராஜி னாமா செய்துவிட்டு ஊருக்குப் போய் விட்டார். சில தினங்கள் கழித்து ஒரு கடிதம் எழுதினார். போடிநாயக்கனூர் வட்டாரத் தில் நடக்கிற கதை. மிகப் பெரிய கதை. எப்படியும் ஐந்து அல்லது ஆறாயிரம் பக் கங்கள் வரக்கூடும் என்று சொன்னார்.

அதுவரை பிழைப்புக்கு வழி?

'பாத்துக்கலாம்ணே' என்று அவர் மனத்துக்குள் சொல்லியிருக்கக்கூடிய குரல் என் செவிகளில் விழுந்தது.

எப்படியும் ஐந்தாறு வருடங்கள் பிடிக் கும் என்று வேணுகோபால் சொல்லி யிருந்தார். இப்போது அந்தக் கால இடைவெளி முடிவடையும் நேரம். தற் செயலாக சில மாதங்களுக்கு முன்னர் நெய்வேலியில் வேணுகோபாலைப் பார்த் தேன். அதே உற்சாகம். அதே புன்னகை. அதே குதூகலம். "அண்ணே, நாவல முடிச் சிட்டேண்ணே..."

அவர் முடித்துத்தான் இருவார். அந்த மன உறுதியை எனக்குத் தெரியாதா?

''எப்படியும் அஞ்சாயிரம் பக்கம் வந்துரும்ணே. நாவல் ரொம்ப நல்லா வந்திருக்கு'' என்றார். 'காற்றுக்கடவு' என்று தலைப்பிட்டிருப்பதாகச் சொன்னார்.

ஓரிரு மாதங்களில் வந்துவிடும். படிக்க வேண்டும். அவரது முதல் நாவலை வாசித்ததிலிருந்தே அவரது அடுத்த படைப்புக்காகக் காத்திருப்பவன் நான்.

(தொடரும்)

# மூட்டு வலியா!
# இனி கவலை வேண்டாம்

## பத்தியம் கிடையாது. பக்க விளைவு கிடையாது

மூட்டு வலி என்பது மூட்டுக்களில் ஏற்படும் பாதிப்பை குறிக்கின்றது. இதனை கீழ்வாயு என்றும் அழைப்பார்கள். வாதம், பித்தம், கபம் போன்றவைகள் கூடுவதாலும், குறைவதாலும் இந்நோய் உண்டாகிறது.

**மூட்டு வலி பல வகைப்படும் அவைகள் :**

**வாதமூட்டு வலி :** வாயுப் பொருட்களை அதிகம் உண்பதால் உண்டாகிறது. வாயுப் பொருட்கள், பயிறு வகைகள், பருப்பு வகைகள், கிழங்கு வகைகள் முதலியன. **பித்தமூட்டு வலி :** பித்தத்தை அதிகப்படுத்தும் உணவுப் பொருட்களை அதிகம் உண்பதால் உண்டாகிறது. டீ, காபி, மது, காரமான உணவு வகைகள் முதலியன. **கப மூட்டு வலி :** கபகுற்றம் மிகுதியான உணவுப் பொருட்கள் அதிகம் உண்பதால் கப மூட்டுவலி உண்டாகிறது. இனிப்பு பண்டங்கள், தயிர், இறைச்சி, நெய், எண்ணெய் பண்டங்கள் முதலியன. **இதய கீழ் வாயு :** இதயத்தை நோய் கிருமிகள் தாக்குவதால் இதய மூட்டு வலி உண்டாகிறது. இதனால் ஜுரம், முழங்கால் மூட்டுகளில் வீக்கம், வலி, சூடு போன்றன தோன்றும். சோதனை செய்து பார்க்கும்போது இதயத்தில் பாதிப்பு ஏற்பட்டிருக்கும். **மேக கீழ் வாயு :** விலை மாதர் உறவால் நோய் கிருமிகள் உடலில் பரவி மூட்டுக்களில் பாதிக்கின்றது. இதனால் மூட்டுக்களில் சீழ் பிடித்தல், வீக்கம், வலி, குத்தல், குடைச்சல் போன்றன இருக்கும். **மூட்டு வலியின் அறிகுறிகள் :** மூட்டுக்களில் வலி, குத்தல், குடைச்சல், வீக்கம், நடக்க இயலாமை, சுரம் போன்றவை காணப்படும். மேலும் எலும்பு தேய்மானம், சீழ் பிடித்தல் போன்றவையும் உண்டாகும்.

**மூட்டுக்களை பாதுகாக்கும் முறைகள் :** எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால் மூட்டுக்களில் எண்ணெய் சென்று நன்றாக செயல்படவும், மிருது படவும் செய்கின்றது.

**உடற்பயிற்சி :** நடத்தல், உட்கார்ந்து எழுதல், குனிந்து நிமிர்தல், கை, கால் விரல்களை, நீட்டி மடக்குதல், நின்றஇடத்தில் குதித்தல், ஓடுதல், நீந்துதல், மூச்சுப் பயிற்சி போன்றவைகள் சைக்கிள் ஓட்டுதல் முதலியன மூட்டுக்களை பலம் பெறசெய்கின்றன. ஆகவே இதனை தினம் காலை, மாலை, சுமார் 20 நிமிடம் மெதுவாக செய்தல் நல்லது. சூரிய ஒளி தினமும் உடலில் படும்படி 10 நிமிடம் நிற்கவும். மேற்கூறிய முறைகளை பின்பற்றினால் எல்லாரக மூட்டு வலிகளில் இருந்தும் குணம் பெறலாம்.

குறிப்பு : சென்னை, வேலூர், காஞ்சிபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர், ஒசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்றநகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம் - விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

தகவல் : டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 28 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்றபுத்தகத்தினை பதிவுத் தபாலில் பெறரூ.100/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்றபுத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.100/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.




*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

**Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, Dr.M.சிவசக்தி, S/o Dr.C.K.மாணிக்கவாசகம்**

தலைமை முகவரி : அஞ்சல் பெட்டி 30, எண்.1, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (வ.ஆ.மா.) - 635 601 ✆ : 04179-220469, 222769 Cell : 9443438670

சென்னை முகவரி : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 10. ✆ : 044-26424285, 26427638 Cell : 9444161670

டெல்லி கிளை : Mrs.Valli, 6/34, W.E.A., Karolbagh, New Delhi - 5. ✆ : 011-25736220 Cell : 9868026743

**மேலே உள்ள மூன்று முகவரிகளிலும் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1, மாலை 5 to 7**

| | | |
|---|---|---|
| **7 & 8** ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR). ✆ : 24011589, 24033879 | **9** ந் தேதி - பெங்களூர் : காலை 11 to மாலை 1 மணி வரை Hotel Ajantha, 22A, Mahatma Gandhi Road, Bangalore - 560 001. ✆ : 25584321 | **20 & 21** ந் தேதி - புதுடெல்லி : காலை 9 to இரவு 8 மணி வரை 6/34, W.E.A., Karolbagh, New Delhi - 5. ✆ : 011 - 25736220. Cell : 9818209458 |



# கதை எழுத வாங்க!

**சுவாரஸ்யம்:**

30 நாட்களில் ஆங்கிலம், ஹிந்தி கற்றுக்கொள்வது எப்படி என்று புத்தகங்களைப் பார்த்திருப்பீர்கள்! ஆனால் 100 நாட்களில் உங்களை நாவல் எழுத வைப்பதாக ஆவலைத் தூண்டுகிறது peacecorpswriters. org ''ஒரு நாவலை எழுதப் போகிறேன் என சத்தியப்பிரமாணம் எடுத்துக் கொள்ளுங்கள். அது கஷ்டம்தான். ஆனால் நீங்கள்தான் எழுதப் போகிறீர்களே!'' என்று தொடங்குகிறது முதல் நாள். 101-வது நாளும் இருக்கிறது. எட்டிப் பார்த்தால், ''அடுத்த நாவலைத் தொடங்குங்கள்'' என்கிறார்கள்.

**அன்பு:**

நம்ம மனசுக்குப் பிடிச்சவங்களுக்கு நாமே வாழ்த்து அட்டைகளைத் தயாரிக்க சிநேகமா உதவுது mycardmaker.com ஒட்டறதுக்குப் பதிலா பட்டன்களைத் தட்டித் தட்டி அழகான கார்டை உருவாக்கி, உங்க அன்பை வெளிப்படுத்துங்க!

**டௌன்லோட்:**

நெட்டிலிருந்து ஏதேதோ டௌன்லோட் பண்ணிக்கிட்டு இருப்பீங்க. திடீர்னு கனெக்ஷன் கட் ஆயிடும். 'அய்யய்யோ'ன்னு தலைல கையை வச்சிக்கிட்டு உட்கார்றதுக்குப் பதிலா, www.freedownloadmanager. org/download.htm-க்குப் போங்க. டௌன்லோட் மேனேஜரை இறக்குமதி பண்ணுங்க. நெட் கனெக்ஷன் பாதியிலேயே பொட்டுனு போனாலும், திருப்பி கனெக்ட் ஆனப்புறம் விட்டதுலருந்து புடிக்கலாம்.

**வலைப்பதிவு:**

''மக்களுக்கு அறிவு வரும்படி எதையும் சொல்ல ஒரு வெங்காயப் புலவனும் இல்லை. தமிழ் மிகவும் காட்டுமிராண்டிகள் கையாள வேண்டிய மொழியாகும். நாகரிகத்திற்கேற்ற வண்ணம் அமைந்துள்ள மொழியென்று சொல்வதற்கில்லை. தமிழ்ப் புலவர்கள் தமிழை நியூசென்ஸ் ஆக்கி விட்டார்கள்'' - அருளியவர் ஜெயகாந்தன் இல்லை. அவரை இன்று விமர்சிக்கிறவர்கள் தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடும் பெரியார் ஈ.வே.ராமசாமி அவர்கள். (மேலும் சர்ச்சைகளுக்கு pksivakumar.blogspot.com)

- ப்ரௌஸர்



# நடக்குமென்பார்; நடக்கும்!

1.6.2005 முதல்
7.6.2005 வரை



**மேஷம்:** காரியங்கள் தாமதமாகும் வாரம். தனம் வாக்கு மேன்மை உண்டாகும். வீடு மாற்றம் ஏற்படும். படிக்கும் மாணவர்களுக்கு காலேஜில் சீட்டு கிடைக்கும். உத்தியோகஸ்தர் களுக்கு பதவி உயர்வு காத்திருக்கிறது. திருமணம் ஆகாதவர்களுக்கு திரு மணம் நடக்கும். வியாபாரிகள், பங்கு மார்க்கெட், தொழில் அதிபர்களுக்கு ஏற்ற காலம். சிலருக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு காத்திருக்கிறது. வேலை இல்லாதவர்களுக்கு வேலை கிடைக்கும்.



**ரிஷபம்:** வாரம் முழுதும் நினைத்த காரியம் வெற்றிதான். குடும்பத்தில் குதூகலம், பொருளாதார மேன்மை, வீடு வாங்கும் யோகம் ஏற்படும். திருமணம் ஆகாத ஆண், பெண்களுக்கு திருமணம் கை கூடும். உத்தியோகத்தில் வேலை மாற்றம், விரும்பிய இடத்தில் கிடைத்தல் கூடும் கலைஞர்கள் பாராட்டு பெறுவார்கள்.



**மிதுனம்:** எதிலும் மேன்மை கிட்டும் வாரம். வாக்கு, தனப் பெருக்கம் ஏற்படும். வீடு மாற்றம், தொழில் மாற்றம் ஏற்படும். கலைஞர்கள் முன்னேற்றம் காண்பார்கள். திருமண காரியங்கள் கை கூடும். கொடுக்கல் வாங்கல் மேன்மை பெறும். புதிய தொழில் செய்ய ஏற்ற காலம். கணவன் - மனைவி உறவு சீர்படும். குழந்தைகள் பற்றின மனக் கவலை தரும்.



**கடகம்:** தெய்வ அனுகூலம் உள்ள வாரம். சாதுக்கள் தரிசனம், புண்ணியத் தலங்கள் செல்லுதல் கூடும். பொருளாதார கஷ்டம் விலகும். உடல் நிலை சீராகும். வீட்டில் சுப காரியம் நடக்கும். வியாபாரிகள் நல்ல பலன் அடைவார்கள். மாணவர்களுக்கு நல்ல தகவல்கள் கிடைக்கும். மனக் குழப்பம் தீரும். கணவன் மனைவிக்கு அனுசரணை இருக்கும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படலாம். உத்தியோகஸ் தர்களுக்கு தொல்லை நீங்கும்.



**சிம்மம் :** வெற்றி தரும் வாரம். வீட்டில் சுப காரியம் நடக்கும். உறவினருடன் மனஸ்தாபம் வரலாம். எச்சரிக்கையுடன் நடப்பது நல்லது. திருமணம் ஆகாதவர்களுக்கு திருமணம் நடக்கும். மறதி இருக்கும், கவனம் தேவை. கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. பணக்கஷ்டம் இருக்காது. மாணவ மாணவியர் நல்ல பலனை பெறுவார்கள். நல்ல வேலை கிடைக் கும். வியாபாரிகள் நல்ல பலனை அடைவார்கள்.



**கன்னி:** மனக்கவலை தீரும் வாரம். வீட்டில் நல்ல காரியம் நடக்கும். கணவன் மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. வாக்குவாதம் வேண்டாம். உத்தியோகஸ்

தஞ்சை பரத்வாஜ்

# பரத்வாஜ்

**● என் இரண்டாவது மகனுக்கு இதுவரை நல்ல வேலையும் அமைய வில்லை. பெண் வீட்டாருக்கு ஜாதகம் அனுப்பினால் சரிவர பதிலும் வருவ தில்லை. எங்களது மகனின் எதிர்காலம் குறித்தும், பரிகாரமேதும் தேவையா என்றும் தெரிவிக்க வேண்டுகிறேன்.**

**- எஸ். கிருஷ்ணமூர்த்தி ராவ், ஸ்ரீவில்லிபுத்தூர்**

உங்கள் மகனுக்கு ராகு தசை காரணமாக திருமணம் தாமதித்து வருகிறது. மே, 2005க்குப் பின் திருமணம் கைகூடும். பிறந்த ஊருக்கு வடக்கு திசையிலிருந்து இரு உடன்பிறந்தவர் உள்ள, படித்த, பெண் அமைவாள். திருமணத்திற்குப் பின் நல்ல வேலை அமையும். பரிகாரம் தேவையில்லை.

**● எங்கள் வளர்ப்பு மகளுக்கு 2003ல் கர்ப்பம் தரிக்காமல் Terminate செய்ய வேண்டியதாயிற்று. அதன் பிறகு இது வரை சுபச் செய்தி கிடைக்கவில்லை. எப்போது கிடைக்கும்?**

**- வி. நாகராசன், சென்னை - 83**

உங்கள் மகளின் ஜாதகப்படி திருமணமாகி 8வது வருஷத்தில் ஆண் குழந்தை, பூசம் / அனுஷம் / உத்திரட்டாதி நட்சத்திரத்தில் பிறக்கும். பரிகாரமேதும் தேவையில்லை.

**● என் மகளுக்குத் திருமணமாகி வரதட்சணைக் கொடுமையால் துன்பப் பட்டு வருகிறாள். பெற்றோரைப் பார்க்க விடாமல் சிறைக் கைதி போல துன்பப் படுகிறாள். இந்த நிலை எப்போது மாறும்?**

**- பெயர் வெளியிட விரும்பாத வாசகர், விருதுநகர்.**

சரி வர பொருத்தமில்லாத ஜாதக சேர்க்கையால் இப்படி துன்பப்பட நேரிட்டுள்ளது. ஜாதகப்படி இவர்கள்

---

தர்களுக்கு இடமாற்றம், புதிய பதவி கிடைக்கும். தனப் பெருக்கம் ஏற்படும். வீடு வாங்கும் யோகம் கிடைக்கும். கலைஞர்கள் ஏற்றம் காண்பார்கள். தொழிலில் இருந்த மந்தகதி விலகும். மாணவர் மாணவியருக்குப் பொற்காலம்.



**துலாம்:** நன்மை தரும் வாரம். படிக்கும் மாணவ மாணவியருக்கு நல்ல ரிசல்ட் காத்திருக்கிறது. சிலருக்கு அயல் நாடு செல்லும் வாய்ப்பு காத்திருக்கிறது. வேலை தேடுபவர்களுக்கு வேலை கிடைக்கும். திருமண காரியங்கள் கைகூடும். வியாபாரிகள் நல்ல பலன் பெறுவார்கள். வீட்டில் நல்ல காரியம் நிறைவேறும். குழந்தைப்பேறு ஏற்படும்.



**விருச்சிகம் :** வெற்றி தரும் சுபமான வாரம். குழந்தைகள் வழியில் சுப காரியங்கள் நடக்கும். மனக்குழப்பம் தீரும். புதிய தொழில் தொடங்க நினைப்பவர்கள் தொழில் துவங்கலாம். சிலருக்கு புதிய வீடு வாசல் அமையும். உத்தியோகஸ்தர்களுக்கு பணி மாற்றம் பணி உயர்வு கிடைக்கும். கலைஞர்களுக்கு சிறப்பான வாரம்.



**தனுசு:** எதிலும் நிதானத்துடன் இருக்க வேண்டிய வாரம். குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. சுப காரியம் நடக்கும். மாணவர்களுக்கு நல்ல ரிசல்ட் காத்திருக்கிறது. சிலருக்கு வேலை பளு அதிகமாக இருக்கும். இடமாற்றம் ஏற்படும். ஆரோக்கியத்தில் கவனம் தேவை. உஷ்ண சம்பந்தமான நோய் வரலாம். அனாவசியமான பேச்சு கூடாது. குரு, சனி, ராகு, கேது வழிபாடு அவசியம். ஆஞ்சநேயர் கோவிலுக்கு சனிக் கிழமையில் போய் வரவும்.

# பதில்கள்

சேர்ந்து வாழ்தல் மிகவும் கஷ்டம். துன்பங்கள்தான் தொடரும். வேறு வழியில்லை. இறைவனை பிரார்த்தனை செய்யவும்.

**● என் மகளுக்கு பல வழிகளில் முயன்று, பரிகாரங்கள் செய்தும் திருமணம் தடைப்படுகிறது. எப்போது அவளது திருமணம் நடக்கும்?**

**- சின்னராசு, அன்னனூர்**

19.8.2005க்கு மேல் தடைகள் போய் விடும். பிறந்த ஊருக்கு தெற்கில், நல்ல வேலையில் உள்ள வரன் அமையும். கவலை வேண்டாம்.

**● என் மகளுக்கு எத்தனையோ வரன்கள் பார்த்தும் எதுவும் கூடி வர வில்லை. எப்போது திருமணம் நடக்கும்?**

**பி. சினிவாச ராகவன், கடலூர் - 2**

உங்கள் மகளின் 27வது வயதில், பிறந்த ஊருக்கு தெற்கு / மேற்கு திசையில் பிறந்த வரன் அமையும். தனியார் துறையில் நல்ல வேலையில் இருப்பார். உங்கள் மகள் நன்றாக வாழ்வாள்.

**● என் மகளுக்கு திருமண முயற்சிகள் பல எடுத்தும் இதுவரை கைகூடவில்லை. எப்பொழுது திருமணம் நடக்கும்?**

**- என். ராமகிருஷ்ணன், சென்னை -41**

உங்கள் மகளுக்கு 28வது வயதில் திருமணம் நடக்கும். தற்போது சுக்ர தசையில் கேது புத்தி நடப்பதால் திரு மணம் ஏமாற்றமாக முடியும். எனவே சூரிய தசை சூரிய புத்தியில் திருமணம் செய்ய வேண்டும். வெளியூர் வரனாக, இரு உடன் பிறந்தவர் உடைய, தனியார் துறையில் வேலை செய்யும் வரன் அமையும்.



**மகரம்:** வெற்றிக் கொடி பறக்கும் வாரம். குடும்பத்தில் குதூகலம் ஏற்படும். வியாபாரிகள் மேன்மை பெறுவார்கள். பண வரவு பெருகும். வேலை தேடும் நபர்களுக்கு நல்ல வேலை கிடைக்கும். சிலர் வெளி தேசம் செல்வார்கள். கடவுள் அனுக்கிரஹம் கிடைக்கும். வீடு வாசல் வாங்க ஏற்ற நேரம். திருமணம் ஆகாத பெண்கள்/ ஆண்கள் திருமணம் நடக்கும். கலைஞர்கள் ஏற்றம் பெறுவார்கள். உடல்நிலை சீராகும்.



**கும்பம்:** நீண்ட பிரச்னைகள் முடிவுக்கு வரும் வாரம். வேலை இல்லாதவர்களுக்கு வேலை கிடைக்கும். திருமணம் ஆகாதவர்களுக்கு திருமணம் நடந்துவிடும். மனக்குழப்பம் தீரும். வெளிநாட்டுப் பிரயாணம் அமையும். குடும்பத்தில் கணவன் மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. கைப்பொருள் மீது கவனம் தேவை. யாரிடமும் அதிக பேச்சு வைத்துக் கொள்ளக் கூடாது. ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வீடு மாற்றம் ஏற்படும். புதிய வீடு வாங்கும் யோகம் ஏற்படும். குரு, ராகு, கேது வழிபாடு நல்லது.



**மீனம்:** நற்பலன் மிகுந்த வாரம். ஆரோக்கியம் பற்றின கவலை விலகும். குழந்தைகள் வழியில் சுபச் செலவுகள் வரும். மனத்தில் இருந்த பயம் போகும். வாக்கு, தனம் மேன்மை உண்டாகும். வியாபாரிகளுக்கு மந்தநிலை மாறி தொழில் முன்னேற்றம் ஏற்படும். மாணவ மாணவியருக்கு பொற்காலம். உத்தியோகஸ்தருக்கு இடமாற்றம், பதவி மாற்றம் ஏற்படும். கணவன் மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது.

# தேர்தல் போச்சு... தேர் உருவாச்சு!

**கா**ஞ்சிபுரம், கும்மிடிப்பூண்டி இடைத்தேர்தல் முடிவு தெரிந்த நாளன்று, ஜெ. தமது சிறுதாவூர் மாளிகையில் தங்கியிருந்தார். இரு தொகுதிகளிலும் வெற்றி நிச்சயம் என்ற தகவல் வந்த பிறகுதான் அங்கிருந்து சென்னைக்குப் புறப்பட்டார். கான்வாய் திருப்போரூரை நெருங்கியதும் நேராக சென்னை சாலையில் செல்லாமல், வலது புறம் திரும்பி, அங்குள்ள புகழ்பெற்ற முருகன் கோயிலுக்குச் சென்றது. தமக்குக் கிடைத்த வெற்றிக்காக முருகனுக்கு நன்றி சொன்ன ஜெ., 'கோயிலுக்கு தேர் வேண்டும்' என்ற கோரிக்கை வந்தவுடன் உடனே ஓ.கே சொல்லிவிட்டார். இது வரை சப்பரங்களின் மேல் வலம் வந்த முருகப் பெருமான், இனி அழகாகத் தேரில் வலம் வரப் போகிறார்.

ஜெ. அறிவிப்பு வெளியிட்டவுடன் சுறுசுறுப்பாகப் பணிகளைத் துவங்கிவிட்டது அறநிலையத்துறை. திருப்போரூர் கோயிலுக்கு 25 லட்ச ரூபாய் தேர் செய்ய அரசு ஆணை போடப்பட்டு விட்டது. பொதுவாகவே அரசு நிதியிலிருந்து கோயில்களுக்கு தேர் செய்ய சமீபகாலங்களில் நிதியுதவி செய்யப்படுவதில்லை. இதற்குக் காரணம் நிதிப் பற்றாக்குறைதான். குறிப்பிட்ட கோயிலின் சுய வருமானத்திலோ அல்லது உபயதாரர் மூலமாகவோ, இல்லையேல் பொது மக்களிடம் வசூலித்தோதான் செய்கிறார்கள். இந்த நிலையில் திருப்போரூர் முருகர் அதிர்ஷ்டக்காரர்தான்! ''இடைத்தேர்தலுக்கு முன்னர் பல நாட்கள் சிறுதாவூரில் தங்கியிருந்த ஜெ. திருப்போரூர் முருகனுக்கு 'வெற்றியைக் கொடு' என்று நேர்ந்து கொண்டு அதற்கான கடனைத்தான் செலுத்தியிருக்கிறார்'' என்று கிசுகிசுப்போரும் உண்டு.

**த**மிழ்நாட்டில் உள்ள அறநிலையத் துறைக்குச் சொந்தமான கோயில்களின் தேர்களைச் செப்பனிடுவதும், தேர் செய்வதும் பெரும்பாலும் தமிழ்நாடு



• மதுரை சித்திரைத் தேர்





கைவினைப் பொருள்கள் கழகத்தின் பூம்புகார் நிறுவனம்தான். இந்த நிறுவனத்தில் கோயில் மற்றும் சிற்ப சாஸ்திரத்தில் தேர்ந்த நிபுணர்கள் பொறுப்பில் இருக்கிறார்கள். சிதம்பரம், திருவல்லிக்கேணி பார்த்த சாரதி, மாங்காடு என்று பல கோயில்களுக்குத் தேர் செய்து கொடுத்தது பூம்புகார் நிறுவனம்தான். சில தனியார் கோயில்களில் தேர் செய்ய டெண்டர் கோருகிறார்கள். அப்படி டெண்டரில் வெற்றி பெற்றும் பல தேர்களை பூம்புகார் நிறுவனம் செய்து கொடுத்திருக்கிறது. இப்போது திருப்போரூர் கோயிலுக்குத் தேர் தயாரிக்கும் பணியில் சுறுசுறுப்பாக ஈடுபட்டிருக்கிறார்கள் அதிகாரிகள்.

"தேரின் உயரம் என்பது மூலவர் உயரத்தையோ, அல்லது கருவறை விமானத்தின் உயரத்தையோ அல்லது முகப்புக் கோபுரத்தின் உயரத்தையோ தொடர்பு படுத்தி முடிவு செய்ய வேண்டிய ஒன்று. இதற்கான வழிகாட்டுதல்கள், விதிகள் இருக்கின்றன. அப்படி உயரத்தை முடிவு செய்தவுடன், அதை பிரமாண முறைப்படி சரியாக நிர்ணயம் செய்ய வேண்டும். பதினைந்து விதமான - ஆயம், விரயம் - யோனி, நட்சத்திரம் என்றெல்லாம் பிரமாண முறைகள் இருக்கின்றன. இதன் மூலம் சரியான உயரம் நிர்ணயிக்கப் படுகிறது. தேர் செய்வது என்பது முழுக்க முழுக்க கணக்குதான்" என்று சொல்கிறார் பல தேர்களை உருவாக்கிய ஒரு ஸ்தபதி.

எந்தத் தேராக இருந்தாலும் ஆறடுக்குக்கு மேல் இருக்காது. பூதப்பார், விக்கிரகப்பார், சித்துரு தளம், பெரிய அங்கனம், தேவாசனம், சிம்மாசனம் என்பதுதான் ஆறடுக்கின் பெயர்கள். இதில் சிம்மாசனத்தில்தான் சுவாமியை அமர வைப்பார்கள். இந்த ஆறடுக்கின் உள் கட்டமைப்பாக பதினைந்து அடுக்குகள் உண்டு. மூர்த்தி (சுவாமி) இருக்கும் சிம்மாசனத்தைச் சுற்றி யானிக்கட்டை, சிங்கக்கட்டை, அஸ்தியானி ஆகியவை அமைக்கப்பட்டிருக்கும். முன்பக்கம் இரண்டு அல்லது நான்கு குதிரைகளுடன் சாரதி மூர்த்திக்கு மேலே தேரின் விமானம். இதுவும் நான்கடுக்கு அல்லது ஐந்தடுக்குக்கு மேல் இருக்காது. வைணவத் தல தேர்களில் சைவ சமய மூர்த்தி சிலைகளை வைப்பதைத் தவிர்க்கிறார்கள். பிள்ளையாருக்கு நாமம் போட்டு தும்பிக்கை ஆழ்வாராக மாற்றி விடுகிறார்கள். சைவத் தல தேர்களில் 'பெருமாள் சிவனுக்குக் கீழேதான்'

என்ற தோனியில் சிலைகள் வைக்கப் படுகின்றன.

சேர, சோழ, பாண்டிய, தொண்டை மண்டலம் என்று அந்தந்தப் பகுதிகளுக்கு ஏற்ப தேர் நிர்மாணிப்பது வித்தியாசப் படுகிறது. இப்போது திருப்போரூர் கோயில் தேர், தொண்டை மண்டல முறைப்படி உருவாக்கப்பட இருக்கிறது. இது தவிர அந்தந்தக் கோயிலின் ஸ்தல வரலாறும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படும். தேருக்கு ஆறு சக்கரங்கள் தேவை. நான்கு வெளிப்புறமாக இருக்கும். 25 அடி உயரத் தேரை செய்து முடிக்க இரண்டு அல்லது மூன்றாண்டுகள் ஆகலாம் என்கிறார்கள். ஒரு தேரில் குறைந்தது 200 சிலைகளாவது செய்து பொருத்துகிறார்கள். இந்தச் சிலைகள் சொல்லும் கதைகள் பல. இதில் 'கலைக்' கண்களுடன் பார்க்கக் கூடிய சிலைகளும் உண்டு. முன்பெல்லாம் தேரை முழுக்க, முழுக்க இலுப்பை மரத்தில்தான் செய்து வந்தார்கள். இப்போது தேக்கு மரத்தையும் பயன்படுத்துகிறார்கள். அதேபோல தேர்ச் சக்கரங்கள் இப்போது 'பெல்' நிறுவனத்தால் இரும்பில் செய்து கொடுக்கப்படுகின்றன.

"நான் தேர்களைப் பற்றி ஆராய்ச்சி செய்தபோது 35க்கும் மேற்பட்ட தேர்களை அணு, அணுவாகப் பார்த்து ரஸித்திருக்கிறேன். இந்த 25 ஆண்டுக் காலத்தில், அவற்றுள் கணிசமான தேர்கள் அழிந்து போய் விட்டன. இப்போதாவது நாம் விழித்துக் கொண்டால்தான் மிச்சமாகியிருக்கும் கலைப் பொக்கிஷங்களைக் காப்பாற்ற முடியும்" என்கிறார் டாக்டர் ராஜு காளிதாஸ். தஞ்சைத் தமிழ் பல்கலைக் கழகத்தின் சிற்பம் மற்றும் கலை வரலாற்றுத் துறைத் தலைவர் இவர். 1980ம் வருடம் தேர்களைப் பற்றி ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் வாங்கியவர். இவரது பல கட்டுரைகள், ஆய்வு அறிக்கைகள், உள்நாட்டு, வெளிநாட்டு ஆராய்ச்சி இதழ்களில் வெளி வந்துள்ளன. இதன் மூலம் இங்கிலாந்து மற்றும் பிரான்ஸ் தேசத்து ஆராய்ச்சியாளர்கள் பலர், நமது தேர்களைப் பற்றி ஆராய்ந்து பல அரிய தகவல்களை வெளிக் கொணர்ந்திருக்கிறார்கள்.



• ராஜு காளிதாஸ்

"தமிழ்நாட்டில் இப்போது 900த்துக்கும் மேற்பட்ட தேர்கள் இருக்கின்றன. அவற்றை சென்னையிலிருந்து திருச்சி வரை அழகாகத் தொடர்ந்து நிறுத்தி வைக்கலாம். ஆனால் பராமரிப்பு கிடையாது. தேர்கள் நிறுத்தி வைக்கப்படும் இடங்கள் பொதுக்கழிப்பிடங்களாகி விட்டன. ஆண்டுக்கு ஒரு முறையோ அல்லது இருமுறையோதான் தேர் வலம் வருகிறது. அந்தச் சமயங்களில்தான் கோயில் நிர்வாகத்துக்குத் தேர் ஞாபகமே வருகிறது. நமது தேர்கள் விலை மதிக்க முடியாத கலைச் சொத்துக்கள்" என்று சொன்ன டாக்டர் ராஜு காளிதாஸ், "இப்போது பெல் நிறுவனம் தேருக்கு 'ப்ரேக்' போடும் தொழில் நுட்பத்தையும் சேர்த்து விட்டார்கள். அப்படி ப்ரேக் போட்டு உடனடியாக நிற்கும்போது தேர் குலுங்கிப் போகிறது. இப்படிக் குலுங்குவது தேருக்கும் அதன் சிலைகளுக்கும் ஆபத்தையும், சேதத்தையும் உண்டாக்கும். எனவே பழைய முறைப்படி சக்கரத்தில் முட்டுக்கட்டையைப் போட்டுத்தான் தேரை நிறுத்த வேண்டும். அதேபோல் சங்கிலியால் இழுக்காமல் வடங்களைத்தான் பயன்படுத்த வேண்டும்" என்கிறார்.

- ப்ரியன்

# எஸ்பிஆர் ஹோம்ஸ் வழங்கும்

## கோவையில் பல நவீன வசதிகளுடன்

# தனி வீடுகள்



தயார் நிலையில் வீடுகள்

- 2 மற்றும் 3 படுக்கையறைகள் கொண்ட தனி வீடுகள்
- ரயில் நிலையத்திலிருந்து 6 கி.மீ.
- பள்ளி, கல்லூரி, பல் பொருள் அங்காடிகள், பஸ் நிலையம் அருகில்
- முன்னணி வங்கிகள் மூலம் கடன் வசதி
- 24 மணிநேரம் பாதுகாவலர் வசதி

## Espeeyare Homes



**Site Address:**
Behind Cheran Nagar,
Kavundampalayam, Coimbatore.
**Phone : 2232818, 2233846, 5589177**

**Office Address:**
Promoted by: Espeeyare Enterprises (I) Pvt. Ltd.
15, Malavia Street, Ramnagar, Coimbatore - 641 009.
**Cell : 98422 32818, 92444 07388**

---



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

*அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்*
*ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி* (Regd)
"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"
29-30 கிழக்கு ஐய்யன் தெரு, கும்பகோணம் - 612 001.
E-mail : vedagdps@sancharnet.in - Website : www.geocities.com/gdpskmu

☎ : (0435)
Off : 2425948
Fax : 2423777
Patasala : 2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் முதாதையர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 463 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜ வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 170 மாணவர்களுக்கு 15 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் பாரம்பரியமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் **ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம்** என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | **Rs. 500** | **Rs. 8,000** |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs. 25,000 |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 2 Lakhs |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D/ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

# தைரியலட்சுமி!

சித்ராவை ஒரு சராசரி தமிழ்ப் பெண்ணாகக் கருதிவிடவே முடியாது. ஒரு ஆணுக்குரிய அத்தனை சாகசங்களையும் செய்வதோடு, வெளிநாட்டில் ஒரு பெண் எந்தளவு சுதந்திரத்தோடு வாழ்வாளோ, அதுபோன்றதொரு வாழ்க்கையை சென்னை அண்ணா நகரில் இருந்து கொண்டு வாழ்ந்து வருகிறார்.

இருபது வயதில் எண்ணற்ற திறமைகளாலும், சமூக அக்கறை சார்ந்த எண்ணங்களாலும் காண்போரை அசத்தும் சித்ரா, சமீபகாலமாக மும்பை, பெங்களூர், ஸ்ரீபெரும்புதூர் போன்ற இடங்களில் நடைபெற்ற தேசிய அளவிலான பைக் ரேஸில் ஆண்களுடன் போட்டியிட்டு, மூன்றாம் இடத்தைப் பிடித்திருப்பது பலரையும், குறிப்பாக ஆண்களை மிரள வைத்திருக்கிறது.

"சென்னையில் பைக் ரேஸில் கலந்து கொள்ளும் ஒரே பெண் நான்தான். முதல்ல, 'நீயா, பைக் ரேஸுக்கா'ன்னு ஏளனப் பார்வை பார்த்தவங்க, நான் ஜெயிச்ச பிறகு என்னை ஆச்சர்யமா பார்க்கிறாங்க. அடுத்தது மலேஷியாவுக்குப் போய் உலக அளவிலான போட்டியில கலந்துக்கப் போறேன்" என்று தன் பாப் கூந்தலை சிலுசிலுப்பும் சித்ரா,

"கார் ரேஸ்ல எனக்கு ஆர்வமே கிடையாது. அதுல ரிஸ்க்கே இல்லை. விபத்து ஏற்பட்டா கூட அடியே படாது(!). பைக்ல சீறிப் பாயும்போது கிடைக்கிற த்ரில் வேறெதிலுமில்லை" என்று கூலாகச் சொல்கிறார். தற்பொழுது எஸ்.ஏ.இ. கல்லூரியில் டிஜிட்டல் ஃபிலிம் மேக்கிங் படித்து வருகிறார். கல்லூரி நிர்வாகமே இவருக்கு ஸ்பான்சர் செய்கிறது.

"யமஹா என்டைசர் பைக்ல நான் போனா சில பசங்களால ஜீரணிக்கவே முடியாது. தினமும் கிண்டல் பண்ணுவாங்க. வேணும்னே இடிக்க வருவாங்க. பட் ஐ டோண்ட் கேர்" என்கிற சித்ரா, ஸ்கார்ப் பால், இண்டோர் கிரிக்கெட், ரைஃபில் சூட்டிங் போன்ற விளையாட்டுகளில் தேசிய, மாநில அளவில் சாதித்துவிட்டு, மாறுதலுக்காக பைக் ரேஸ் பக்கம் திரும்பியிருக்கிறாராம்.

இயற்கை வளம், கடல்வாழ் உயிரினங்கள், விலங்குகள் மீது தனிப்பாசம் என்பதால் 'வைல்ட் ஆரிஜின்' என்கிற சமூக அமைப்பை ஆரம்பித்திருக்கிறார்.

"நான் தினமும் காலையில் மூணு மணிக்கு எழுந்து தனியா பைக்ல அண்ணா நகரிலிருந்து நீலாங்கரை போவேன். அங்கே கடல் ஆமை முட்டையை திருடுறவங்களை விரட்டி, பத்திரமா ஆமை முட்டையைப் பாதுகாப்பேன். நான் புகழ்பெற்ற கேமராமேனான அல்போன்ஸ் ராயுடன் அடர்ந்த காடுகளுக்குச் சென்று, விலங்குகள் பற்றிய டாகுமெண்டரி படங்களில் பணியாற்றி யிருக்கிறேன் தெரியுமா?" என்று புன்னகைத்துக் கொண்டே என்டைசரை ஒரு உதை உதைத்துக் கிளப்புகிறார்.

விர்ர்ர்ர்ர்.....ட்!

- பப்பி



## இளமை கல்கி

**ஷ்**யாம்... சின்னத் திரை ரசிகர்களுக்கு இவரைத் தெரியாமல் இருக்காது. ஆடுகிறான்



• ஷ்யாம் (நடுவிலிருப்பவர்)

# நத்திங் பட் கலக்கல்ஸ்!

கண்ணனில் அசத்தி முடித்து, தற்போது கணவருக்காக, கோலங்கள், அல்லி ராஜ்யம் என்று கலக்கி வருகிறார்.

நடிப்போடு சேர்ந்து இசைக்குழு நடத்தி வரும் ஒரே சின்னத்திரை ஆசாமி, அநேகமாக இவராக மட்டும்தான் இருக்க முடியும். 'பணம் சம்பாதிக்க அத்தனை ஆசையா?' என்றால்,

"நீங்க வேற பாஸ். எனக்கு மியூஸிக்ல அதிக ஆர்வம் உண்டு. நாங்க ஃப்ரெண்ட்ஸ் அஞ்சாறு பேர் சேர்ந்து 'ப்ளே பாய்ஸ்'ங்கற மியூசிக் ட்ரூப்பை ஆரம்பிச்சோம். எங்க ட்ரூப் போட கேப்ஷன் 'நத்திங் பட் கலக்கல்ஸ்.' எங்க மியூஸிக்கை கேட்டுட்டு வீட்டுக்கு சந்தோஷமா போகணும். அதுக்காக லைட் மியூஸிக், வெஸ்டர்ன், பாப், ராப், கானான்னு நான் ஸ்டாப்பா கலக்குவோம். பணம், புகழுக்கு நடிப்பு. திருப்திக்கு இசை" என்று சிரிக்கிறார்.

"சினிமா, சீரியல், மியூஸிக்னு மூணு குதிரை சவாரி பண்றேன்... நல்லாவும் பாடுவேன்... இந்த ட்ரூப்போட ஆர்கனைசராவும் இருக்கேன். 'ப்ளே பாய்ஸ்'ல நான் மட்டும்தான் பார்ட் டைம் எம்ப்ளாயி... மத்தவங்க எல்லாரும் ஃபுல் டைம்தான். இப்போதைக்கு மேரேஜ், பர்த்டே, கார்பரேட் ஃபங்ஷன்ஸ்ல புரோக்ராம் பண்றோம். சீக்கிரமே ஃபாரின்லாம் போயி ஷோ பண்ணணும்னு ஆசையா இருக்கோம்" என்று சொல்லும் ஷ்யாம் குழுவின் சிறப்பு, இசைக்காக பயன்படுத்தப்படும் அனைத்துக் கருவிகளுமே மேனுவலாக இயக்கப்படுவதுதான்!

- கலை

# அப்... அப்... அர்மான்!



அட... ஸ்போர்ட்ஸில் இப்போது இந்தியாவுக்கு ஏறுமுகம் போல (கிரிக்கெட் தவிர)! புதுக புதுசாய் பல துறைகளில், திரையை விலக்கிக்கொண்டு, நிறைய சாதனையாளர்கள் வெளி வருகிறார்கள்.

லேட்டஸ்ட்... அர்மான் இப்ராஹிம்! வயது 16. சென்னைப் பையன். மீசை இப்போதுதான் யோசித்துக் கொண்டுள்ளது வளரவா, வேண்டாமா என! ஆனால் இவரது ஆசை, சாதனையாக மாறி விட்டது. அர்மான் மே இரண்டாவது வாரம் மலேஷியாவில் நடந்த ஆசிய BMW ஃபார்முலா கார் ரேஸில் முதலிடம் பெற்று அசத்தியிருக்கிறார்.

அன்று நடந்த முதல் போட்டியில் நான்காவதாக வந்தார் அர்மான். அது கூடுதல் பலம் கொடுக்க, இரண்டாவதாய் நடந்த போட்டியில் முதலிடம் பெற்று முத்திரை பதித்திருக்கிறார். இவ்வளவு இளம் வயதில் சர்வதேச போட்டிகளில் முதலிடம் பிடித்த வீரர் என்ற பெருமையையும் நமக்குத் தேடித் தந்துள்ளார் அர்மான்.

"மொத்தம் ஏழு லேப்ஸ். கடினமான போட்டிதான். இதுல நான் முதலிடம் பிடிப்பேன்னு நினைச்சுக்கூட பார்க்கல!" என சந்தோஷப்படும் அர்மானின் தந்தை அக்பர் இப்ராஹிமும் கார்ப் பந்தயக்காரர்தான். முன்னாள் கிரிக்கெட்டரும் கூட.

"நரேன் கார்த்திகேயன் சர்வதேசப் போட்டிகளில் பங்கெடுக்க ஆரம்பித்த பின்புதான் இந்தியாவில் கார் பந்தயத்துக்கு மதிப்பு கிடைத்தது. அதேபோல் அர்மானுக்கு ஜே.கே.டயர்ஸின் ஸ்பான்சர்ஷிப் கிடைத்ததால்தான் அவன் கலந்துகொண்டு சாதிக்க முடிந்துள்ளது. இல்லையேல் நானும் என் மகனின் ஸ்பான்சர்ஷிப்புக்காக ஏங்கி, தூங்காமல் இரவுகளைக் கழித்திருப்பேன்" என்கிறார் அக்பர்.

அர்மானின் எதிர்காலம், இனி தொடர இருக்கும் BMW சாம்பியன்ஷிப் போட்டிகளில் அவருடைய திறமையைப் பொறுத்து அமையும். அதேபோல பிரிட்டிஷ் F-3 போட்டிக்காக தம்மைத் தயார்படுத்திக் கொண்டிருக்கிறார் அர்மான். இந்தப் போட்டிதான் ஃபார்முலா ஒன் பந்தயங்களில் நுழைவதற்கான வாசல் கதவுகளைத் திறக்கும்.

தமிழ்நாட்டிலிருந்து சர்வதேச களங்களில் தங்களின் தடங்களைப் பதிக்கும் நரேன், அர்மானை நல்ல சவுண்டா ஒருமுறை ஹார்ட்பூர்வமா 'ஹார்ன்' செய்து வாழ்த்துவோம்!

- முகில்



# இளமை கல்கி

"அதாகப்பட்டது, சிறுகதை எனப்படுவது யாதெனில்..." என்றெல்லாம் மாணவர்களை பயமுறுத்தாமல்...

பொறுமையுடன், மிக அழகாக "சரி நான் இப்போ ஒரே ஒரு கதை சொல்றேன்" என்று தொடங்கி...

சிறிது சிறிதாக மாணவர்களை எழுத்துலகத்திற்குள் கடத்திச் சென்றனர்.

அசோகமித்திரன், இந்திரா பார்த்தசாரதி,



# "ம்மாத்தேன் போ!"

இரா.முருகன், சுதாங்கன், மாலன், வசந்த் செந்தில் என்று சிறுகதை தொடங்கி திரைக்கதை வரை எழுத்தின் அத்தனை முகங்களையும் பிரதிபலிக்கும் ஜாம்பவான்கள் அட்டகாசமாக வகுப்பெடுத்தனர்.

கிழக்கு பதிப்பகம், மைலாப்பூர் டைம்ஸ் இருவரும் இணைந்து நடத்திய மூன்று நாள் எழுத்துப் பயிற்சி பட்டறையில் வகுப்பறை சற்றுப் பெரியது. பெயர் தக்ஷின் சித்ரா (ஈஸ்ட் கோஸ்ட் சாலையில் உள்ள ஒரு கலை கிராமம்). சிறுகதை தொகுப்பு போல் குட்டி குட்டியாகப் பல குடில்கள்.

நான்கு நிமிடங்கள் ஓடினால் கடற்கரை. காக்கா, மைனா, மியாவ் மியாவ் எல்லாம் நேரம் கிடைக்கும்பொழுது வகுப்பறைக்குள் மூக்கை நுழைத்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தன. இத்தகைய சூழலில் எழுத்துப் பயிற்சியளித்தால் எப்படியிருக்கும்? பேனா கூட தானாகவே நகர்ந்து போய் ஒரு பேப்பரைப் பிடித்து இழுத்து வந்து "ம்ம்ம்... நாம கூட ஏதாவது கட்டுரை எழுதலாம் போலிருக்கே" என்று முயற்சிக்கும் அல்லவா?

மூன்று நாட்கள் முடிந்தன. "சரி வீட்டுக்குப் போகலாம்" என்று ஒருங்கிணைப்பாளர்கள் ஒவ்வொருவரையும் தேடித் தேடி, கூவிக் கூவி அழைத்தும் கூட "ம்மாத்தேன் போ, ஒரு நாவலாவது எழுதிட்டுதான் வருவேன்" என்று அடம் பிடித்துக் கொண்டிருந்தனர் மாணவர்கள்!

- மருதன்

# குறையொன்றுமில்லை

எருது பரதேசம் போனாற்போலே என்றால்...?

ஒரு விவசாயியினடத்திலே ஒரு எருது இருந்தது. நித்யம் உழைத்து உழைத்து ராத்திரி எப்போதடா அப்பா வரும் என்று ஏங்கும். நம்மை எப்போது கொண்டுபோய்க் கொட்டகையிலே கட்டுவான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கும். ஒரு நாளைக்கு அந்த எருது என்ன பண்ணிற்று... அன்றைக்கு நல்ல பௌர்ணமி. சந்திரன் ஆகாசத்திலே பிரகாசிக்கிறான். கயிற்றை அறுத்துக் கொண்டு கொட்டகையைவிட்டு ஓடிப்போய்விட்டது. 'இவனிடத்திலே இனிமேல் இருக்கக் கூடாது' என்று ஓடிப்போய் பக்கத்து ஊரில் மேய்ந்து கொண்டிருந்தது.

அந்த ஊரில் ஒரு விவசாயி. அவன் ரொம்ப நாட்களாகத் தன் நிலத்தை உழ - ஒரு பத்து ஏக்கரா நிலம் அவனுடையது - ஒரு எருது தேடிக் கொண்டிருந்தான். அவனிடம் ஒரு எருதுதான் இருந்தது. இன்னொரு மாடு கிடைக்கவில்லை. இந்த மாடு மேய்வதைப் பார்த்தான். அதைப் பார்த்தவுடனே 'இனாமாக வந்த மாட்டை நிலாவிலே கட்டி ஓட்டு' என்று ராத்திரி மொத்தம் அதைச் சேர்த்துக் கட்டி அந்த நிலம் மொத்தத்தையும் உழ ஆரம்பித்துவிட்டான்.

இது பார்த்தது... எப்போது அவிழ்த்துவிடப் போகிறான் என்று பார்த்தது. அவிழ்த்து விட்டவுனேயே 'யதாஸ்தானம் பிரதிஷ்டாபயாமி!' என்று மறுபடியும் பழைய கொட்டகைக்கே திரும்பிப் போய்விட்டது. பழைய எஜமானனாவது ஆகாரம் போட்டான். இவன் ஒன்றுமே போடவில்லை என்று ஓடியே வந்துவிட்டது.

இப்படி எருது எங்கேயாவது அவிழ்த்துக் கொண்டு போனால், அதை உட்கார வைத்து 'எருதாய நம:' என்று யாராவது அர்ச்சனை பண்ணுவது உண்டோ! எங்கேபோனாலும் கைங்கர்யம் என்றுதான் அதன் தலையிலே எழுதியிருக்கிறது. இங்கேயும் வேலைதான் அங்கேயும் வேலைதான்.

அந்த மாதிரி நமக்கு இங்கே அங்கே போனாலும் அடிமைதான். வைகுண்டத்திலே போய் உயர்ந்த கதியாகிற அவன் திருவடியிலே, 'முக்தானாம் பரமாகதி:' என்று அங்கும் கைங்கர்யம் தான். இந்த கைங்கர்யத்துக்கும் அந்த கைங்கர்யத்துக்கும் வித்தியாசம் இருக்கிறது. இங்கே நாம் கட்டுப்பட்டு அவஸ்தையுடன் எருது மாதிரி பண்ணுகிறோம். அங்கே சுவேச்சா கைங்கர்யம். ஆனந்தத்துடன் பண்ணக்கூடிய உத்தம கைங்கர்யம் என்பதனாலே, அது கிடைப்பதற்கு இங்கேயே க்ருஷி (விவசாயம்) பண்ண வேண்டும். இறுதியில் அவனை அடைவதற்கான சாதனங்கள்தான் எல்லாமே. அதனால்தான் விவேக நிர்வேதம் முதலான ஒன்பது படிக்கட்டுகளை அவனே நமக்காக ஏற்படுத்தியிருக்கிறான்.

பகவான் நமக்குக் கொடுத்திருக்கிற கரண களேபரங்களெல்லாமே (புலனுணர்ச்சிகள் அனைத்தும்) அவனை அடைவதற்காகத்தான் தந்திருக்கிறான். கை, கால், இத்யாதி... ஞானம், அறிவு, இந்த சாஸ்திரங்கள், இத்தனை ஆசார்யர்கள், இவ்வளவு வேத வான்மயம், இது மொத்தம் நமக்குக் கொடுத்திருக்கிறானே பரமாத்மா...

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

இவை மொத்தமும் அவனை அடைவதற்கான சாதனங்கள். இவற்றை உபயோகப்படுத்திக் கொண்டு, இந்த வாழ்க்கையை ஒருவன் சத்வினியோகம் பண்ணுகிறானா? என்று பார்க்கிறான். பகவானே அந்த சத்வினியோகத்துக்கு வழி காட்டியுமிருக்கிறான். ஸ்ரீமத் நாராயணனாலேயே அழகாக அமைக்கப்பட்ட ஒன்பது படிக்கட்டுகள்தான் அந்த வழி.

முதல் படிக்கட்டு விவேகம்
இரண்டாவது படிக்கட்டு நிர்வேதம்
மூன்றாவது படிக்கட்டு வைராக்யம்
நான்காவது ப்டிக்கட்டு பீதி
ஐந்தாவது படிக்கட்டு பிரசாதஹேது
ஆறாவது படிக்கட்டு உட்கிரமணம்
ஏழாவது படிக்கட்டு அர்ச்சிராதி மார்க்கம்
எட்டாவது படிக்கட்டு திவ்யதேச பிராப்தி
ஒன்பதாவது படிக்கட்டு பராப்தி என்கிற பகவத் அனுபவம்.

இந்த ஒன்பது படிக்கட்டுகளையும் ஏறினால், ஒன்பதாவது படிக்கட்டில் பகவான் நம்மைக் கட்டி அணைத்துக் கொண்டு ஆனந்திக்கிறான். அதுதான் முக்தி தசையிலே நாம் அடையக்கூடிய பரமானந்தம் என்று காட்டப்பட்டது.

அப்படி யாராவது பூவுலகிலே நடத்திக் காட்டியிருக்கிறாரா என்றால், சுவாமி தேசிகன் பாதுகா சஹஸ்ரம் என்ற கிரந்தத்திலே பரதனைக் காண்பிக்கிறார். 'அவன் பொருட்டு கை கூப்புகிறேன்' என்கிறார்.

பரதன் பக்தி யோகத்துக்குப் பிரதம உதாரணமாய் இருக்கிறான். அவன் காட்டிய வழி இருக்கிறது பாருங்கள்... ராமாயணத்திலே, அந்த வழிதான் தொல்வழி, உத்தமமான வழி, அர்ச்சிராதி மார்க்கத்துக்குப் படிக்கட்டுகள் ஏறிய வழி. அந்த வழிதான் உயர்ந்தது என்று நமக்குக் காட்டித் தருகிறார். அது எப்படி என்று பார்த்தோமானால்...

விவேகம் என்பது முதல் படிக்கட்டு. பிறக்கிற போதே பரதனுக்கு விவேகம் இருந்தது. தெளிவுடையவனாகவே பிறந்தான். இரண்டாவது படிக்கட்டு நிர் வேதம். கடந்த காலத்தை நினைத்து வருந்துதல். ஒரு தப்பும் அறியாத பரதன், எல்லா தப்பையும் தன் மேலேயே போட்டுக்கொண்டு அழுகிறான்.

யார் கதை சொன்னாலும், ராமாயணத்திலே மந்தரையுடைய சூழ்ச்சியினால்தான் ராமன் காட்டுக்குப் போனான் என்பார்கள். பரதன் அப்படி இல்லை என்கிறான்.

கைகேயி வரம் கேட்டாள். அதனால்தான் ராமன் காட்டுக்குப் போக வேண்டியதாயிற்று என்று சொல்வார்கள். அதுவும் காரணமல்ல என்கிறான் பரதன்.

தசரதன் வாக்குக் கொடுத்தான்.



• உஷா

கொடுத்த வாக்கை மீற முடியவில்லை; அதனால்தான் என்பார்கள். அதுவும் காரணம் அல்ல.

பித்ரு வாக்ய பரிபாலனம்... ராமன் தான் அப்பா வார்த்தையைத் தட்டக்கூடாது என்பதற்காக காட்டுக்குப் போனான் என்பார்கள். 'அதுவும் காரணம் அல்ல', என்று சொல்லும் பரதன் எவ்வளவு நிர்வேதப்படுகிறான் பாருங்கள்... ''என் பாபம்தான் காரணம்!'' என்கிறான்.

"ராமன் காட்டுக்குப் போவதற்கு யார் காரணமாக இருந்தாலும், அவர்களுக்கு இந்தப் பெரிய பெரிய பாபங்களை யெல்லாம் எடுத்துச் சொல்லி, அந்தப் பாவமெல்லாம் 'சம்பவிக்கட்டும்! சம்பவிக்கட்டும்!' என்று

சொல்கிறான் பரதன்.

கர்ப்பத்தில் இருக்கும் சிசுவைக் கொல்வது ரொம்பக் கொடிய பாபம். உலகத்துக்குப் பல கெடுதல் அதன் மூலமாக ஏற்படுகிறது. பிரும்ம வித்துக்களைக் கொல்வது, தூங்கிக் கொண்டிருப்பவர்களைக் கொல்வது, ஸ்த்ரீ வதை, கோ(பசு) ஹத்தி - இப்படிப்பட்ட பெரிய பெரிய பாபங்களையெல்லாம் பண்ணக்கூடியவர்கள் இருக்கிறார்கள்.

வேதம் கேட்கிறது; ஒருத்தர் பாபம் பண்ணுகிறாரே... அந்தப் பாபம் அவரை மாத்திரம் சேருமா? ஒருத்தர் பண்ணிய பாபம் வேறு யாருக்காவது போகுமா...?

**சினிமாவில் நடிக்க ஏகப்பட்ட வாய்ப்புங்க வருது. எனக்கு விருப்பமில்ல. படிப்பு, டீ.வி மட்டும் போதும்!**

சாஸ்திர ரீதியாக ஆராய்ந்தால் அது இன்னொருத்தருக்கும் போய்ச் சேரும். எப்படி என்றால், ஒருத்தர் பெரிய பஞ்ச மஹா பாதகங்கள் பண்ணுகிறார்... அப்படிப்பட்டவரின் பாபம் யாருக்குப் போகிறது என்றால், உதயகாலத்திலே ஒருத்தர் படுத்துக்கொண்டு தூங்குகிறார்... கிழக்கு திக்கு நோக்கி காலை நீட்டிக் கொண்டு படுத்துத் தூங்குகிறார்... அதே மாதிரி சாயங்கால வேளையிலே, அஸ்தமன நேரத்திலே படுத்துக் கொண்டு தூங்குகிறார்... இந்த இரண்டு சந்தியா காலங்களில் விழித்துக் கொண்டிருக்க வேண்டும். படுத்துக் கொண்டு தூங்கினால், என்ன ஆகும் என்றால், யாரோ பண்ணிய பாபங்களெல்லாம் இந்த இரண்டு சந்தியா காலத்தில் தூங்குகிறவர்களுக்கு வந்து சேர்ந்து விடும்! இவர் கோ ஹத்தி பண்ண வேண்டியதில்லை. படுத்துக் கொண்டால் போதும்... போச்சு! மகா பாபங்களைக் காட்டிலும் பெரிய பாவம் சந்தியாகாலத்தில் தூங்குவது...

இந்த மாதிரி, பிறர் பண்ணிய பாபம் நமக்கு வந்து சேர முடியும் என்பதனாலே, அந்த மாதிரி பிரதிக்ஞை பண்ணுகிறான் பரதன்.

'ராமனைக் காட்டுக்கனுப்பியவர்களுக்குப் பாபம் சேரட்டும்' என்று சொல்வதனாலே அவன் எவ்வளவு நிர்வேதப்பட்டு அழுகிறான் என்பது தெரிகிறது.

அந்த அயோத்தி மாநகரத்தின் மீது துளிக்கூட பற்றில்லாமல் இருந்தது பரதனுக்கு.

ஒரு தெலுங்கு கவி சொல்லுவார்:

ஸ்மசானத்திலே அப்பாவுக்குச் சிதையூட்ட அக்னி பிரதிஷ்டை பண்ணக்கூடிய பிள்ளை, அத்தி இலையினால் அங்கே ஹோமம் பண்ண வேண்டும்.

வேதத்தில் இதற்கான மந்திரங்கள் உண்டு. காட்டுப் பிரச்னம் என்றே பெயர், அந்த மந்திரத்தை பாடசாலையிலே சொல்லிக் கொடுக்க மாட்டார்கள்; வீட்டிலும் சொல்லிக் கொடுக்க மாட்டார்கள். ஊர்க்கோடி அல்லது ஏரிக்கரைக்கு அழைத்துக் கொண்டு போய்ச் சொல்லிக் கொடுக்கிறபோது, அங்கேதான் சொல்லிக் கொடுப்பார்கள். ஏனென்றால் அந்த முதல் நாள் - இரண்டாம் நாள் மந்திரமெல்லாம் அந்த பிரச்னத்திலேதான் இருக்கும். அந்தப் பிரச்னம் தெரிய வில்லையானால் பிரயோஜனமே இல்லை; வேத அத்யயனம் பண்ணிப் பிரயோஜனமில்லை. இதை நன்றாகத் - காட்டுப் பிரச்னத்தை நன்றாகத் - தெரிந்து வைத்துக்கொள்ள வேண்டும்.

ஹோமம் பண்ணி சிதையூட்டிவிட்டு ஒரு பிள்ளை எப்படி சிதையைத் திரும்பிப் பார்க்காமல் வருவானோ, அந்த மாதிரி அயோத்தி மாநகரைத் திரும்பிப் பார்க்காமல் பரதன் வந்தானென்றால், துளிக்கூட அவனுக்கு அதன் மேல் பற்றில்லை என்று தெரிகிறது.

திரும்பி நந்தி கிராமத்துக்கு வந்தானே என்றால், அது ராம ஆக்ஞையினாலே வந்தான். அவனுடைய ஆக்ஞையை மதித்தானேயொழிய, தான் பற்றுக் கொண்டு அங்கே வரவில்லை என்பதை நாம் உணர வேண்டும். அவ்வளவு வைராக்கிய நிதியாக பரதன் இருந்தான்.

*(வளரும்)*

# காதலாகி...



என் ரசனைக்குரிய அழகுடன், பாரம்பரிய லட்சணங்களை இழந்து விடாமல், அதே இளமை வசீகரத்துடன் மிளிர்பவள் கல்கி! அவளின் தீட்சண்யத்தில் காதலாகினேன் நான்!

- ரா. பார்த்திபன்




படம்: ஸ்ரீஹரி



# மகிழ்ச்சி முடிவின்றி தொடரட்டும்

சேமிப்பு + பாதுகாப்பு




- மாதத்தவணை ரூ. 100ம் அதன் மடங்கிலும் கணக்கைத் துவக்கலாம்
- ஆயுள் காப்புறுதி ரூ. 4,000 முதல் ரூ. 10 இலட்சம் வரையும் விபத்துக் காப்புறுதி ரூ. 20 இலட்சம் வரையும்
- 18 வயதிற்கு மேற்பட்டவர்களும் 55 வயதிற்கு உட்பட்டவர்களும் இத்திட்டத்தில் சேரலாம்
- 3 ஆண்டுகள் முதல் 7 ஆண்டுகள் வரை சேமிக்கும் வசதி
- வருங்கால வட்டியிலிருந்து வங்கியே பிரீமியத்தை முன்னரே செலுத்திவிடும் வசதி
- மாதம் ரூ. 1,000 வீதம் 7 வருடங்கள் சேமித்து முதிர்வுத் தொகையாக ரூ. 1,03,484 பெறலாம் (வருமான வரி பிடித்தமின்றி)
  - *முதிர்வுத் தொகைக்கு சற்று அதிகமான அளவுக்கு, அதாவது ரூ. 1,04,000க்கு ஆயுள்காப்புறுதி*
  - *எதிர்பாராமல் உயிர்இழப்பு நேரிட்டால் நியமனதாரருக்கு ரூ. 1,04,000த்துடன் டெபாசிட் செய்த தொகையும் வட்டியுடன் கிடைக்கும்*
  - *அதுவே விபத்தினால் உயிரிழந்தால் நியமனதாரருக்கு ரூ. 2,08,000த்துடன் டெபாசிட் செய்த தொகையும் வட்டியுடன் கிடைக்கும்*
- பிரீமியம் மற்றும் நியமனதாரர் பெறும் காப்புறுதித் தொகைக்கு வருமானவரிச் சலுகை
- கடன்பெறும் வசதி

* நிபந்தனைக்கு உட்பட்டது

In association with




For Life Insurance

Insurance is the subject matter of solicitation




## தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் லிட்.

*Customer Oriented & Committed to Excellence*

Regd. Office : 57, V.E.Road, Thoothukudi-628 002 Website.www.tmb.in